# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

*ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.*

*வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.*

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.

தொலைபேசி :
71231



*விவரங்களுக்கு:*

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்

## (மூன்று பகுதிகள்)

ஒவ்வொரு பகுதியும் சுமார் 600 பக்கங்கள் கொண்டது.
டெம்மி சைஸ் அழகான காலிகோ பைண்டிங்
(பிளாஸ்டிக் ஜாக்கெட்)

வணக்கம்,

அன்பர்களுக்கு ஓர் அறிவிப்பு. ஏற்கனவே தெரிவித்திருந்தபடி முதல் பகுதி 31-1-83 திங்கட்கிழமையன்று சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் ஸ்ரீராமகிருஷ்ண துறவாலயத்தின் தலைவர் சுவாமி வீரேஸ்வரானந்தர் அவர்களால் வெளியிடப்பட்டது பக்தர்கள் அனைவரும் அறிந்ததே. அச்சிட்ட பிரதிகள் ஒரு சில தினங்களில் விற்பனையாயின. மேலும் மேலும் பிரதிகள் வேண்டி அன்பர்களிடமிருந்து கடிதங்கள் வந்த வண்ணம் உள்ளன. தமிழன்பர்களின் ஆர்வமும் உயர் சிந்தனைகளில் அவர்கள் கொண்டுள்ள ஈடுபாடும் பக்தியும் எங்களைப் பெரு மகிழ்விற்கு உள்ளாக்கின. எனவே தற்போது மீண்டும் முதற் பகுதியை அச்சிட முன்வந்துள்ளோம். தமிழன்பர்கள் இதனைப் படித்துப் பயனடைய வேண்டும் என்பதே எங்கள் அவா.

**இப்பொழுது ஒரு செட் அமுத மொழிகளின் (மூன்று பகுதிகள்) சலுகை விலை ரூ. 65 மட்டுமே. இச்சலுகை ஏப்ரல் மாதம் இறுதி வரை இருக்கும் (30-4-83).** மொத்தமாகவோ அல்லது இரண்டு தவணைகளிலோ (ரூ. 35; ரூ 30) பணத்தைச் செலுத்தலாம். இரு தவணைகளில் செலுத்துபவர்கள் இரண்டாம் தவணையை 30-4-83க்குள் அனுப்பி விடவேண்டும் என்று கோருகிறோம்.

முழுத் தொகையைச் செலுத்தியவர்கள் ஏப்ரல் மாதத்தில் முதற் பகுதியை நேரில் வந்து சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் பெற்றுக் கொள்ளலாம். தபாலில் பெற விரும்புவோர் ரூ. 5 அனுப்பினால் முதற்பகுதியை ரிஜிஸ்டர் தபாலில் அனுப்புகிறோம்.

இச்சலுகை விலை இந்தியாவிற்கு மட்டுமே. வெளி நாடுகளுக்கு, செட் ஒன்றின் விலை ரூ. 100 (தபால் செலவு தனி.)

பிரதிகள் வேண்டுவோர் விரைவில் தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொள்ளுமாறு வேண்டுகின்றோம்.

சென்னை-600 004 — தலைவர்
20-2-1983 — **ஸ்ரீராமகிருஷ்ண மடம்.**

## ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் 148-ஆவது ஜயந்தி விழா 1983 மார்ச் 16-ஆம் நாள் புதன் கிழமை வழக்கம் போல் விமரிசையாக, சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் நடைபெறும். மார்ச் 20-ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி விழாப் பொதுக்கூட்டம் நடைபெறும்.

* * * * *

மின்சாரத் தட்டுப்பாடு, சென்னையிலுள்ள தண்ணீர் பிரச்னை ஆகிய காரணங்களை முன்னிட்டு மார்ச் 18 முதல் 20 வரை மயிலாப்பூர், ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் வழக்கம்போல் நடைப்பெற இருந்த அந்தர் யோக நிகழ்ச்சி இப்போது ரத்து செய்ய வேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டுள்ளது.

எனவே அந்தர்யோக நிகழ்ச்சி தற்போதைக்கு ஒத்தி வைக்கப் பட்டுள்ளது. நிலைமை சீர்பட்ட பின்னர் அந்தர்யோக நிகழ்ச்சி எப்போது நடைபெறும் என்பது அறிவிக்கப்படும்.

கடைசி செய்தி

## உத்தம பக்தரின் மறைவு

சிவகாசி, சுவாமிஜி சன்மார்க்கப் பேரவையின் ஸ்தாபகர் **ஸ்ரீ A. சம்புராஜ்** அவர்கள் பிப்ரவரி 14-ஆம் நாள் இரவு மாரடைப்பால் காலமானார் என்ற செய்தியை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

சிவகாசியில் 'சுவாமிஜி மில்ஸ்' என்ற நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டராக ஸ்ரீசம்புராஜ் இருந்தார். அவர் ஸ்ரீமத் சுவாமி யதீச்வரானந்த மகராஜின் சீடர்; பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரிடம் எல்லையற்ற பக்தி கொண்டவர்.

ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோரின் கருத்துக்களை மக்களிடையே பரப்ப வேண்டும் என்ற ஸ்ரீசம்புராஜ் அவர்களின் ஆர்வத்தை வார்த்தைகளால் விளக்க இயலாது. ஸ்ரீராமகிருஷ்ண மடத்திடம் அவருக்கு இருந்த தேவதா விச்வாசம் மறக்கவொண்ணாதது.

ஸ்ரீசம்புராஜ் பிரிவினால் வருந்தும் அவரது குடும்பத்தினரின் துயரில் 'விஜயம்' பங்குகொள்கிறது. அவரது ஆன்மா சாந்தியடைய பிரார்த்திக்கிறோம்.

ஸ்ரீராமகிருஷ்ணரிடம் முழு அளவில் தம்மை அர்ப்பித்து வாழ்ந்த ஸ்ரீசம்புராஜ், ஸ்ரீராமகிருஷ்ணரின் திருவடியிலேயே ஐக்கியமாகியுள்ளார் என்பது நிச்சயம்.

**சந்தாதாரர்கள் கவனிக்க**

* சந்தா எண் 40,001 முதல் 40,281 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை மார்ச் மாதத்துடன் முடிவடைகிறது. மேற்கொண்டு பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 12ஐ மார்ச் 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 50,000 முதல் 50,208 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஏப்ரல் மாதத்துடன் முடிவடைகிறது.

நிர்வாகி, **ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்**

---

**SRI RAMAKRISHNA VIJAYAM**

(Form IV) (See Rule 8)

Statement about ownership and other particulars about Sri Ramakrishna Vijayam (according to Form IV, Rule 8 circulated by the Registrar of Newspapers of India):

| | | |
|---|---|---|
| 1. Place of Publication | : | Madras-600 004. |
| 2. Periodicity of its Publication | : | Monthly |
| 3. Printer's Name | : | K.L. Chellappan |
| Nationality | | Indian |
| Address | | Shuddhananda Press, 2, Bhajana Koil Street Sriram Nagar, Adyar, Madras-600 020. |
| 4. Publisher's Name | : | Swami Tanmayananda |
| Nationality | | Indian (Hindu Monk) |
| Address | | Sri Ramakrishna Math, Mylapore, Madras-600 004. |
| 5. Editor's Name | : | Swami Tanmayananda |
| Nationality | | Indian (Hindu Monk) |
| Address | | Sri Ramakrishna Math, Mylapore, Madras-600 004. |
| 6. Name & address of the individuals who own the newspaper and partners or shareholders holding more than 1% of the capital. | : | Sri Ramakrishna Math, Mylapore, Madras-600004. |

I, Swami Tanmayananda, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

(Sd.) SWAMI TANMAYANANDA
*Signature of Publisher*

Date: 1-3-1983

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | மார்ச்—1983 | இதழ் 3

## பொருளடக்கம்



# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1983 மார்ச் மாத நிகழ்ச்சிகள்

**பகவான் ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி** விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன காலை
16-3-83 புதன்கிழமை 5 மணி முதல் பகல் 11 மணி வரை நடைபெறும்.

மாலை வழிபாட்டிற்குப் பிறகு இரவு 7 மணிக்கு, 'ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்வும் வாக்கும்' பற்றிய சொற்பொழிவுகள்.

20-3-83 ஞாயிறு **ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி பொதுக்கூட்டம்**
மாலை 5-30 மணிக்கு தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்
பேசுவோர்: டாக்டர் கணேசன், டி. எஸ். நாராயணஸ்வாமி

**விசேஷ தினங்கள்**

28-3-83 திங்கள் ஸ்ரீ சைதன்ய ஜயந்தி; டோல் பூர்ணிமா

மார்ச் 10 & 25 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

**சத் சங்கம்** ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை
ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (மார்ச் 6 & 20)
ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (மார்ச் 13 & 27)

1. விஷ்ணு ஸஹஸ்ரநாமம்—வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (மார்ச் 6)
2. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்—வி. எஸ். வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் (மார்ச்13)
3. இராமாயணம்—ஆர். கோதண்டராமன் (மார்ச் 27)

மாலை 5-30 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி பீதாம்பரானந்தர் 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற தலைப்பில் மார்ச் 6, 13, 27 ஆகிய ஞாயிற்றுக் கிழமைகளில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

**வார நாட்களில் நடைப்பெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-30 மணிக்கு)**

1. திங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்—சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் வைராக்கிய சதகம்—சுவாமி பிரசாந்தானந்தர்
3. புதன் ஆன்மிக வாழ்க்கை—சுவாமி கமலாத்மானந்தர்
4. வியாழன் பகவத்கிதை—பிரம்மசாரி சின்மய சைதன்யா
5. வெள்ளி துளசி ராமாயணம்—சுவாமி வீதபயானந்தர்
6. சனி அத்யாத்ம ராமாயணம்—பி. ராமகிருஷ்ணன் (மார்ச் 5 மட்டும்)

**வேறு சில நிகழ்ச்சிகள்:**

மார்ச் 6 & 20 தேதிகளில் காலை 9-30 மணிக்கு, சுவாமி ராகவேசானந்தர் 'தியானம்' என்ற தலைப்பில் உரை நிகழ்த்துவார். இடம்: 10, ராஜம்மாள் தெரு, லட்சுமிபுரம், ஷெனாய் நகர், சென்னை-600 010.

மார்ச் 12-ஆம் தேதி மாலை 5 மணிக்கு, சுவாமி ராகவேசானந்தர் 'பகவத்கிதை' என்ற தலைப்பில் உரை நிகழ்த்துவார். இடம்: 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம், சென்னை-600 010.

மார்ச் 20-ஆம் தேதி காலை 9-30 மணிக்கு, வி. ராமமூர்த்தி 'ஸ்ரீராம கிருஷ்ணரின் உபதேசங்கள்' என்ற தலைப்பில் உரையாற்றுவார். இடம்: 28, காமராஜர் நகர், திருவான்மியூர், சென்னை-41.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்

தொலைபேசி: 71231 **ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004**



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்

| | | |
|---|---|---|
| தொகுதி 63 | துந்துபி ௵ பங்குனி மீ | இதழ் 3 |







जपो जल्पः शिल्पं सकलमपि मुद्राविरचना
गतिः प्रादक्षिण्यक्रमणमशनाद्याहुतिविधिः ।
प्रणामः संवेशः सुखमखिलमात्मार्पणदृशा
सपर्यापर्यायस्तव भवतु यन्मे विलसितम् ॥

ஜபோ ஜல்ப: சில்பம் ஸகலமபி முத்ராவிரசநா
கதி: ப்ராதக்ஷிண்ய-க்ரமண-மசநாத்யாஹுதி-விதி: ।
ப்ரணம: ஸம்வேச: ஸுகமகில-மாத்மார்ப்பண-த்ருசா
ஸபர்யா-பர்யாயஸ்-தவ பவது யந் மே விலஸிதம் ॥

—ஸௌந்தர்ய லஹரீ-27

ஆத்ம சமர்ப்பண பாவனையால் வெறும் பேச்சும் ஜபமாகவும், கைத் தொழில் அனைத்தும் முத்திரைகளின் விளக்கமாகவும், நடை பிரதட்சிணம் செய்வதாகவும், உணவு முதலியன ஹோமமாகவும், படுத்துக் கொள்ளுதல் நமஸ்கார மாகவும், இன்னும் சுகமாக முயற்சியின்றி எனது செயல் எது எது உண்டோ அது எல்லாம் உன்னுடைய பூஜைமுறையாகவும் ஆகட்டும்.



முருகா என உனை ஓதும்
தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வம் அடைவர்
வியாதி அடைந்து நையார்;
ஒரு காலமும் துன்பம் எய்தார்
பரகதி உற்றிடுவார்
பொரு காலன் நாடு புகார்
சமராபுரிப் புண்ணியனே !

—சிதம்பர சுவாமிகள்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள்வாக்கு



சனிக்கிழமை, டிசம்பர் 22, 1883

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** ஆழமான குளங்களில் வெகு ஆழத்தில் பெரிய பெரிய மீன்கள் இருக்கும். தீனியைத் தூவினுல் போதும்; அந்த வாசனையால் கவரப்பட்டு மீன்கள் தண்ணீரின் அடிமட்டத்திலிருந்து மேலே கிளம்பி வரும். சில சமயம் துள்ளிக் குதித்து நீந்தி வரும். பிரேமைபக்தி தீனி போன்றது. இறைவன் இந்த உலகில் மனித வடிவம் தாங்கி லீலை புரிகிறுன்; கிருஷ்ணர், ராமர், சைதன்யர் போன்ற வடிவங்களில் அவதரிக்கிறுன்.

இறைவன் மனிதனிடத்தில்தான் அதிகமாகப் பிரகாசிக்கிறுன் என்று கேசவரிடம் ஒரு சமயம் கூறினேன். வயலில் வரப்புக்களின் ஓரமாகச் சிறு சிறு வளைகள் இருக்கும். அவை மிகவும் ஆழமானவை; மழைக் காலங்களில் இந்த வளைகளில் நண்டு, மீன் முதலியவை அதிக அளவில் தங்கியிருக்கும். நண்டையும் மீனையும் தேட வேண்டுமானுல் இந்த வளைகளில்தான் அப்போது தேட வேண்டும். அது போலவே இறைவனைத் தேட வேண்டுமானுல் அவதார புருஷர்களிடம்தான் தேட வேண்டும்.

அவதார புருஷர்களை அறிந்துகொள்ள விரும்பினுல், பகவானின் தரிசனம் பெற வேண்டுமானுல், ஆத்மசாதனை செய்ய வேண்டும். குளத்தில் பல பெரிய மீன்கள் இருக்கின்றன. அவற்றைப் பார்க்க வேண்டுமானுல் தண்ணீரில் தீனியைத் தூவ வேண்டும். பாலில் வெண்ணெய் இருக்கிறது. அதை எடுப்பதற்குப் பாலைத் தயிராக்கிக் கடைய வேண்டும். கடுகில் எண்ணெய் இருக்கிறது. எண்ணெயை எடுக்கக் கடுகைச் செக்கிலிட்டு ஆட்ட வேண்டும். மருதோன்றியைப் பூசிக்கொண்டால் கை சிவப்பாகும். அதற்கு மருதோன்றியை நன்ருக அரைக்க வேண்டும்.

**ஒரு பக்தர்** (ஸ்ரீராமகிருஷ்ணரிடம்): இறைவன் உருவமுள்ளவனு அல்லது உருவமற்றவனு?

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** கொஞ்சம் பொறு! கொஞ்சம் பொறு! முதலில் நீ கல்கத்தாவிற்குப் போ. அதன் பிறகு அங்கே இருக்கும் மைதானம், ஆசியா சங்கம், வங்கி ஆகியவை எங்கே இருக்கின்றன என்பதைத் தெரிந்து கொள்ளலாம். நீ கட்தா என்ற கிராமத்தைச் சேர்ந்த ஒரு பகுதிக்குச் செல்ல வேண்டுமானுல் முதலில் கட்தாவுக்குப் போக வேண்டும்.

உருவக் கடவுளைக் குறித்துச் சாதனை செய்வது சுலபம். ஆனுல் அதுவும் அவ்வளவு சுலபமல்ல. அருவக் கடவுளைப்பற்றிய சாதனைகளை அதாவது ஞானயோகம் பற்றிய சாதனைமுறைகளை, உருவக் கடவுளை வணங்கும் பக்தர்களிடம் சொல்வது நல்லதல்ல. மிகவும் பாடுபட்டுப் பக்திவழியில் செல்பவன் கொஞ்சம் பக்தியை வளர்த்திருக்கிறுன். அவனிடம் போய், 'உலகப் பொருள்கள் எல்லாம் கனவு, உண்மையற்றவை' என்று கூறினுல் அது அவனது பக்திக்கே ஆபத்து விளைவிக்கும்.

'தத்தாத்ரேயரும் ஜடபரதரும் பிரம்மஞானமடைந்த பிறகு இந்த உலகத்திற்குத் திரும்பி வரவில்லை' என்று கூறுவார்கள். சுகதேவர் பரப்பிரம்மம் என்ற சமுத்திரத்தின் ஒரே ஒரு துளியை மட்டும் உட்கொண்டு பிரம்மத்தில் லயித்துவிட்டார் என்றும் சொல்வதுண்டு. அந்தக் கடலின் அலைகளையும் பெரிய ஓசையையும் பார்த்தும் கேட்டும்

இருந்தாரே தவிர, அவர் அந்தக் கடலுக்குள் மூழ்கவில்லை.

ஒரு பிரம்மசாரி, 'கேதாரைத் தாண்டி அந்தப் பக்கம் சென்றால் உடல் நிலைக்காது' என்று என்னிடம் கூறினார். அதே போல் பிரம்மஞானத்திற்குப் பிறகு உடல் நிலைப்பதில்லை. இருபத்தொரு நாட்களில் மரணம் உண்டாகிவிடும்.

ஒரு பெரிய சுவர். அதை அடுத்து எல்லையற்ற பரந்த இடம். நான்கு நண்பர்கள் அந்தச் சுவரின் பின்புறம் என்ன இருக்கிறது என்று அறிய முயன்றனர். ஒவ்வொருவராகச் சுவர் மீது ஏறி மறு பக்கத்திலுள்ள இடத்தைக் கண்டு, 'ஹா! ஹா!' என்று கூறிச் சிரித்தபடியே உள்ளே குதித்துவிட்டனர். மூன்று பேரும் சுவரின் மறு பக்கத்தில் என்ன இருக்கிறது என்பதைப்பற்றி மற்றவர்களுக்கு ஒன்றும் சொல்லாமலே அதற்குள் குதித்துவிட்டனர். ஒரே ஒருவன் மட்டும் சுவர் மீது இருந்து பார்த்துவிட்டு வந்து மற்றவர்களுக்குத் தகவல் தெரிவித்தான். பிரம்மஞானத்திற்குப் பிறகும் அவனது உடல் அழியாமல் இருந்தது. ஏனென்றால், அவன் உலக மக்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும். அவதார புருஷர்கள் என்பவர்கள் இந்த வகையைச் சேர்ந்தவர்கள்.

அரசன் ஹிமவான் வீட்டில் பார்வதி மகளாகப் பிறந்தாள். தன் தந்தைக்கு அவள் தன்னுடைய பல தெய்விக வடிவங்களைக் காட்டி அருளினாள். அவற்றைக் கண்ட ஹிமவான் தன் புதல்வியிடம், ''குழந்தாய்! உன்னுடைய பல தெய்விக வடிவங்களைக் கண்டேன். ஆனால் உன்னுடைய மற்றோர் உருவத்தை அதாவது உன் பிரம்ம சொரூபம் இருக்கிறதே, அதை எனக்கு ஒரு முறை காட்டு'' என்றான். அதற்குப் பார்வதிதேவி, ''தந்தையே, தாங்கள் பிரம்மஞானத்தை அடைய விரும்பினால், உலகத்தைத் துறந்து சாதுக்களுடன் வாழ வேண்டும்'' என்று கூறினாள். ஆனால் தந்தை ஹிமவானோ பார்வதியை விட்டபாடில்லை. மீண்டும் மீண்டும் பிரம்ம வடிவத்தைக் காட்டியருளும்படி வற்புறுத்தினான். அப்போது பார்வதி ஒரு முறை தன் பிரம்ம சொரூபத்தைக் காட்டியருளினாள். அதைத் தரிசித்தவுடனே ஹிமவான் மூர்ச்சித்துக் கீழே விழுந்துவிட்டான்.

நான் இப்போது கூறியதெல்லாம் வேதாந்த விசாரத்தின் மூலம் அறியக் கூடிய விஷயமாகும். 'பிரம்மம் உண்மை; உலகம் பொய்' என்று அறிவதுதான் விசாரம். 'காண்பதெல்லாம் கனவு போலவே உண்மையற்றது' என்று கருதும் மார்க்கம் மிகவும் கடினமான வழி. இந்த வழியில் இறைவனது லீலை கனவு போன்றது; பொய்யாகிவிடுகிறது. 'நான்' என்ற எண்ணம்கூட அங்கே பறந்தோடிவிடுகிறது. இந்த நிலையில் அவதாரத்தை ஒப்புக்கொள்வதற்கில்லை. இது மிகவும் கடினமான பாதையாகும். விசாரத்தைக் குறித்த இத்தகைய கருத்துக்களைப் பக்தி மார்க்கத்தைப் பின்பற்றும் பக்தர்கள் அதிகம் கேட்பது நல்லதல்ல.

எனவேதான், இறைவன் தானே அவதாரம் செய்து பக்தியைக் குறித்து மக்களுக்கு உபதேசிக்கிறான். சரணாகதி அடையச் சொல்கிறான். இறைவனின் கருணையால் தோன்றும் பக்தியாலேயே ஞானம், விஞ்ஞானம் எல்லாம் கிடைத்துவிடுகின்றன. இறைவன் இந்த உலகில் தன் லீலையை நடத்துகிறான். இருந்தும், இறைவன் பக்தர்களின் பக்திக்குக் கட்டுப்பட்டிருக்கிறான்.

சில சமயம் கடவுள் காந்தக் கல்லாக இருக்கிறார்; பக்தன் ஊசியாக இருக்கிறான்; ஆனால் வேறு சில சமயம் பக்தன் காந்தக் கல்லாகிவிடுகிறான்; இறைவன் ஊசியாகிவிடுகிறான். பக்தன் இறைவனைத் தன்னிடம் இழுக்கிறான். இறைவன் பக்தவத்சலன், பக்தர்களுக்குக் கட்டுப்பட்டவன். ★



# அப்பர் செய்த புரட்சி

திருமுருக கிருபானந்தவாரியார்

அருள் சேர்ந்த நெஞ்சினுர்க்கில்லை
இருள் சேர்ந்த இன்னு வுலகம் புகல்.

அருள் நிறைந்த உள்ளத்தார் இருள் நிறைந்த உலகம் புகமாட்டார் என்ற படியால், அருத்தாபத்தி நியாயமாக அருள் நிறைந்த இன்ப உலகம் புகுவார் என்பது பெறப்படும். எனவே, இன்ப உலகம், துன்ப உலகம் என்பன உண்டு என்று வள்ளுவர் வாக்கினுல் உறுதிப் படுகிறது. சுவர்க்கமும் நரகமும் உளவோ என்று அறிஞர்கள் ஐயுறுதல் கூடாது.

சுவர்க்க உலகில் இன்ப நுகர்ச்சியும் நரக உலகில் துன்ப நுகர்ச்சியும் துய்த்து முடிந்தபின் அவ்வுயிர் விண்ணினின்றும்



மழைவழியாக மண்ணுலகத்திற்கு வரும். வந்து நீரிலே, காய்கனி தானியங்களிலே சேரும். அது ஆணிடத்திலே சேர்ந்து அறுபது நாட்கள் கருவிருந்த பின், பெண்ணிடத்திலே சேர்கிறது. ஆகவே ஒவ்வோர் உயிரும் தந்தையிடம் கரு விருந்த பின்பு தாயிடம் சேர்கிறது. இதனுல் ஒவ்வொருவரும் தம் பெயருக்கு முன் தந்தையின் பெயரின் முதலெழுத்தை வைத்து எழுதுவர். இது யாவரும் ஒப்புக்கொள்ள வேண்டிய—மறுக்க முடியாத உண்மையாதலின் எந்தப் பெண் மணியும் இதுபற்றி வாதிப்பதில்லை.

மகனே! நான்தான் பத்து மாதம் சுமந்து பெற்றேன்; பால் கொடுத்தேன்; வளர்த்தேன். என் பேரை முதலில் அமைக்காமல் சும்மா இருந்த உன் அப்பன் பேரை அமைக்கின்றனையே? இது முறையா? தருமமா? நீதியா? நெறியா? போகட்டும். உன் அப்பன் பேர் பாண்டுரங்கம். என் பேர் விசாலாட்சி; அப்பன் பேரில் முதல் எழுத்து 'பா'; என் பெயரில் முதல் எழுத்து 'வி'; இரண்டு எழுத்தையும் சேர்த்து 'பாவி' என்று அமைத்துக்கொள் என்று எந்தப் பெண்ணுவது வழக்குத் தொடுத்திருக்கிருளா? இல்லை. ஏன்? உயிர் கணவனிடமிருந்து வந்த படியால் பிதாவின் பேரை அமைப்பதே முறை என்று அறிந்துள்ளனர். ஆனபடியால், எல்லா உயிர்களும் தந்தையிடத்தில் தங்கியபின் தாயிடம் வருகின்றன. இந்த உயர்ந்த உண்மையை உலகம் உணரும்பொருட்டு அப்பரடிகள், 'அப்பன் நீ, அம்மை நீ' என்று கூறினுர் என உணர்க.

நமது உடம்பைப் பெற்றெடுத்த அப்பனுக்கும் ஆண்டவனே அப்பன். ஆதலால், 'ஐயனும் நீ' என்று அருளிச் செய்தார்.

**மற்ருேர் அரிய கருத்து**

'அன்புடைய மாமனும் மாமியும் நீ.'

இது ஒரு புரட்சி.

இறைவனை 'அப்பன் நீ' என்ருர். மறுபடியும் 'மாமன் நீ' என்கிருர். மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இது முரண் போல் தோன்றும்; ஆழமாகச் சிந்தித்தாலன்றி விளங்காது.

இதை நவில்பவர் நாவுக்கரசர்; சிவானுபூதிச் செல்வர். அவருக்கு அனுபவ அறிவு நிறைந்துள்ளது. நமக்கு நூலறிவு; அவருக்கு வாலறிவு.

'அப்பனே மாமனுராக எப்படி அமைய முடியும்?' என்ற ஒரு வினு எழும்.

'தந்தையே மாமனுராக வர முடியுமா? தந்தைமுறைக்கும் மாமனுர்முறைக்கும் நிரம்ப வேறுபாடு இருக்கிறதே. பெண் தந்தவன்தானே மாமன்? பெற்ற வன் மாமனுக முடியாதே?' என்றெல் லாம் நினைக்கத் தோன்றும்.

தந்தை தான் தேடிய பொன், பொருள், வீடு, நிலம், புலம் யாவும் ஓரளவு மகன் நுகர இசைந்தாலும் முற்றிலும் தர இசையான். தான் உள்ளவரை அதி காரம் தன்னிடம் இருக்க வேண்டும், தான் மறைந்த பிறகு மகனுக்குச் சேரட் டும் என்று நினைப்பான். இதுதான் உலக இயல்பு.

மாமனுர் தாம் தவம் புரிந்து பெற்ற பெண்மணியைக் கொடுத்து, அவளுக்கு உரிய ஆடை அணிகலன்கள் யாவும் மரு மகன் அனுபவிக்கக் கண்டு மகிழ்கிருர். அது போல் மண், விண், தென்றல், காய், கனி, தானியம், பால், தேன், பொன், மணி, கடல், கதிர், மதி யாவும் இறைவனிடம் பெற்றவை. இவற்றை யெல்லாம் நாம் அனுபவிக்க, இறைவன் மகிழ்கின்ருன். இறைவன் பெற்ற கடற் கரையில் நாம் இனிது அமர்ந்து குளிர்ந்த காற்றை நுகர்கிருேம். இறைவன் பெற்ற தண்ணிலாவில் நாம் அமர்ந்து இன்புறு கிருேம். இறைவன் படைத்த பொருள் களையெல்லாம் உயிர்கள் அனுபவித்து இன்புறக் கண்டு இறைவன் மகிழ்கிருன். அதனுல் 'அன்புடைய மாமியும் நீ' என்று அழகாகக் கூறியருளினுர்.

இங்கேயும் மாமனை முதலில் வைத்து, மாமியைப் பின்னே அமைத்த அழகைச் சிந்தியுங்கள்.

பிள்ளையைப் பெற்றவர்கள் தங்கள் பிள்ளை மருமகளுடன் மிக்க அன்பாக மருவி மகிழ்வதைக் கண்டு நிறைவு பெறு வதில்லை; குறையும் படுவார்கள். மாமன் மாமி தம் மகளுடன் மருமகன் மிக்க அன்பாக மருவி மகிழ்வதைக் கண்டு எல் லையில்லாத நிறைவு பெறுவார்கள். அத ஞல்தான் 'அன்புடைய' என்ற சொல்லை அப்பன் நீ அம்மை நீ என்ற இடத்தில் கூருமல், மாமன் மாமிக்கு அடையாக்கி, 'அன்புடைய மாமனும் மாமியும் நீ' என்று கூறியருளினுர். இந்தத் திறனைச் சிந்தித்தால், அப்பர் பெருமானுடைய நுண்ணுணர்வு எத்துணை விழுமியது என்று புலப்படும்.



சிலர் ஆண் பிறப்பு உயர்வுடையது என்றும், பெண் ஆணுக்கு அடிமை என்றும் கூறுவர். 'நம் முகத்தில் வலக் கண் உயர்ந்ததா? இடக் கண் உயர்ந்ததா?' என்று கேட்டால், அதற்கு என்ன விடை கூற முடி யும்? இரண்டு கண்ணுந் தான் உயர்வுடையன. அது போல் வாழ்க்கை யில் கணவனும் மனைவியும் சமமான பெருமையுடையவர்கள். ஆணுக்கு உள்ள பெருமை பெண்ணுக்கு உண்டு; பெண் ணுக்கு உள்ள பெருமை ஆணுக்கு உண்டு. சமமானபெருமையுடையவர் கணவனும் மனைவியும். கணவன் வெளியே சென்று வருந்திப் பொருளீட்டி வருகிருன். மனைவி வீட்டில் இருந்து மனையறத்தைச் செய்து தன தானியங்களைக் காத்து விருந்தோம்பிக் கணவனுக்கு உரிய நலன்களைப் பேணி நலன் புரிகிருள்.

இல்லறமான வண்டிக்குக் கணவன் ஒரு சக்கரம், மனைவி ஒரு சக்கரம். ஒரு சக்க ரத்திலே வண்டி ஓடாது. இரண்டு சக்கரங்கள் இருந்தால்தான் ஓடும். ஒன்று பெரியதாகவும் ஒன்று சிறியதாகவும் இருந்தாலும் வண்டி ஒழுங்காக ஓடாது. இரு சக்கரங்களும் ஒரே அளவில் இருக்க வேண்டும். எனவே இல்லறமான சகடத்

எப்போதும் கடவுளை நினைத்துக்கொண்டிருங்கள். இறைவனின் திருநாமத்தை எழுத்து மூலமோ, ஜபமாலை வைத்துக்கொண்டோ, விக்கிரக ஆராதனை செய்துகொண்டோ எப் போதும் ஞாபகத்தில் வைத்திருங்கள்.
—ஒரு மகான்

திற்குக் கணவனும் மனைவியும் ஒத்த நிலை யுடையவர். இந்தக் கருத்தை நாம் நன்கு உணரும்பொருட்டே, 'ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ' என்று அருளினர். பெண்ணின் பெருமையை ஒரு சிறு அடி எவ்வளவு அழகாக நமக்குக் கூறுகிறது என்பதைச் சிந்தியுங்கள்.

ஜாதி வேறு; குலம் வேறு.

மாகாணம் வேறு; மாவட்டம் வேறு.

ஜாதி என்பது பெரும் பிரிவு. குலம் என்பது சிறு பிரிவு. ஒரிஸ்ஸா மாகாணம், பீகார் மாகாணம், சென்னை மாகாணம் என்று கூறுவதை அறிக. நெல்லை மாவட்டம், மதுரை மாவட்டம் என்று கூறுவதையும் அறிக.

மனித ஜாதி, மிருக ஜாதி, பட்சி ஜாதி என்று கூறுவதை ஓர்க. சாதி என்பது மனிதனையும் விலங்கினையும் பிரிக்கும் பெரும் பிரிவு. குலம் என்பது மனிதருக்குள் அந்தண குலம், அரச குலம், வைசிய குலம், வேளாள குலம் என்பதாகும். இந்த நுணுக்கத்தை உணராதார் பிராம்மண ஜாதி, வேளாள ஜாதி என்கிறார்கள். அது திருச்சி மாகாணம் என்று கூறுவது போலாகும்.

மனிதருக்குள் குணங்களால் குலம் அமைந்தது. எல்லோரும் ஒன்றுதான். தணிந்த சிந்தையுடையவன் அந்தணன்; பொறி புலன்களை வென்றவன் அரசன்; பிறரை வசீகரிக்கிறவன் வைசியன்; பிறருக்கு உதவி புரிகிறவன் வேளாளன்; சினம் வருகிறவன் சண்டாளன். குண பேதத்திலே இது அமைகிறது. ஒருவனே தணிந்த சிந்தை உள்ளபோது அந்தணன்: உபகாரம் புரியும்போது வேளாளன்; கோபிக்கிறபோது சண்டாளன்.

ஆதலால் குலம் என்பது தனித்து நிற்பதில்லை. எல்லோரும் ஒரு குலந்தான். குணத்தினால் மாறுபடுகிறார்கள். ஆகவே ஜாதி வேறு, குலம் வேறு. இனி ஜாதி, குலம் என்று தருக்கு வரக் கூடாது. அதனால் வெறி வரக்கூடாது.

சாதி குலம் பிறப்பென்னும்
சுழிபட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை
அல்லலறுத் தாட்கொண்டு
பேதை குணம் பிறருருவம்
யான் எனதென்னுரை மாய்த்துக்
கோதிலமு தானானைக்
குலாவுதில்லை கண்டேனே

என்று மணிவாசகனார் கூறியருளினார்.

குலம் குலம் என்று வெறி பிடித்து அலைதல் கூடாது.

'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்று சங்கநூலும் கூறுகிறது. இத்தனையும் நாம் உணர்ந்து உய்யுமாறு, 'ஒரு குலமும் சுற்றமும் ஓருரும் நீ' என்று கூறினார்.

போகப் பொருள்களைத் தந்தானும் இறைவன். போகப் பொருளாய் நின்றானும் இறைவன். அவற்றின் பயனும் இறைவன். அவற்றை நுகருமாறு நம்மைச் செலுத்துவானும் இறைவன். எல்லாம் இறைவன்தான்.

'துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ' என்றார்.

திருநாவுக்கரசர் திருவாமூரிலே புகழனார் மாதினியார் செய்த மாதவத்தால் அவதரித்தார். இளமையிலேயே தாய் தந்தையர் மறைந்தார்கள். தமக்கையாரை மணஞ்செய்ய இருந்த கலிப்பகையார் மறைந்தார். அதனால் அவர் யாக்கை நிலையாமையை அறிந்தார். பல அறம் புரிந்தார். நல்லாறு தெரிந்து உணர நம்பர் அருளாமையால் சமண சமயம் புகுந்தார். அவருடைய தமக்கையார் திலகவதியார் அது கண்டு மிக்க மன வேதனையுற்றார். திருவதிகையிலிருந்து தவம் புரிந்தார். சிவமூர்த்தியை வேண்டினார். தம்பி திருந்த வேண்டும் என்று

பல பாவங்கள் புரிந்தவனும் திட நம்பிக்கையுடன் தெய்வப் பணியில் ஈடுபடுவானாகில் உலகம் அதிசயிக்கத்தக்க மகானாக மாறுவான். —ஞானேச்வரர்

சிவபெருமானிடம் முறையிட்டார். அந்த முறைக்கு இரங்கிய இறைவன் அவருக்குச் சூலைநோய் தந்து தடுத்தாட்கொண்டருளினுர். இந்தக் குறிப்பை வைத்து, 'துணையாய் என் நெஞ்சம் துறப்பிப்பாய் நீ' என்ருர்.

துணை என்பது தம் தமக்கையார் திலகவதியாரை உணர்த்துவது என உணர்க.

பொதுவாக ஒவ்வோர் உயிருக்கும் இறைவன் தோன்ருத் துணையாக நின்று உலகபோகத்தினின்றும் மீட்சியைத் தருகிருன்.

சிறப்பாக அப்பருக்குத் திலகவதியார் மூலம் துறவு கிடைத்ததனுல், 'துணையாய் என் நெஞ்சம் துறப்பிப்பாய் நீ' என்று கூறியருளினுர்.

நாம் காண்கிற பொருள்களில் பொன்னும் மணியும் உயர்ந்தன. 'இப் பொன் நீ, இம் மணி நீ, இம் முத்து நீ' என்ருர். 'பொன்னுனுய் மணியானுய் போகமானுய்' என்று மற்றுமொரு பாடலிலும் கூறுகிருர். 'பொன்னே மணியே பொருளே அருளே' என்று அருணகிரியார் கந்தரநுபூதியில் கூறுகிருர். பொன்னினும் மணி உயர்ந்தது. மணியிலும் முத்து உயர்ந்தது. உலகிலும் ஐம்பதாம் ஆண்டில் பொன்விழாவும், அறுபதாவது ஆண்டில் மணிவிழாவும், எண்பதாவது ஆண்டில் முத்துவிழாவும் கொண்டாடுவார்கள். பொன், மணி, முத்து இந்த மூன்றும் ஒன்றுக்கொன்று உயர்வுடையன. மனிதனும் ஐம்பதில் உயர்ந்து பொன்னுக வேண்டும். அறுபதில் மேலும் உயர்ந்து மணியாக வேண்டும். எண்பதில் பந்தத்தினின்றும் விடுபட்டு முத்தாக வேண்டும், இந்த விழாக்கள் இந்தக் குறிப்பில் அமைய வேண்டும். வெறும் ஆரவாரமுடையனவாக அமைதல் கூடாது. இத்தனையும் ஆனவன் ஏறூர்ந்த செல்வனும் இறைவனேயாகும். ஏறு—தரும விடை.

> **அப்பன் நீ, அம்மை நீ, ஐயனும் நீ,**
> **அன்புடைய மாமனும் மாமியும் நீ,**
> **ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ,**
> **ஒரு குலமும் சுற்றமும் ஓரூரும் நீ,**
> **துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ,**
> **துணையாய் என் நெஞ்சம்**
> **துறப்பிப்பாய் நீ,**
> **இப் பொன் நீ இம் மணி நீ, இம் முத்தும் நீ,**
> **இறைவன் நீ ஏறூர்ந்தசெல்வன் நீயே.**

உலகங்களையெல்லாம் இறைவன் தாங்குகிருன். அந்த இறைவனைத் தருமம் தாங்குகிறது. ★



## சேரிடம் அறிந்து சேர்



ஊரன் அடிகள்



'சேரிடம் அறிந்து சேர்' என்பது ஔவையார் வாக்கு (ஆத்திசூடி). சேருதற்கு உரிய இடத்தை அறிந்து சேர வேண்டும். எல்லா இடத்திலும் சேர்ந்துவிடக் கூடாது. 'சேராத இடந்தனிலே சேர வேண்டாம்' என்பது உலகநீதி. நாம் சேர வேண்டிய இடம் எது? மக்களாகப் பிறந்த நாம் முடிவில் சேர வேண்டிய இடம் இறைவனுடைய திருவடி. முடிவில் இறைவனுடைய திருவடியைச் சேர்வதற்கு நாம் இப்போது எதைச் சேர வேண்டும்? யாரைச் சேர வேண்டும்? இறைவனுடைய திருக்கோயிலைச் சேர வேண்டும். அவனடியாரைச் சேர வேண்டும்.

# செந்தீ அழல்

கி. வா. ஜகந்நாதன்

இறைவன் சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம் என்ற மூன்று தொழிலையும் செய்கிறான். அந்த மூன்று தொழில்களையும் தன் ஆணையால் பிரம்ம விஷ்ணு ருத்திரர்களைச் செய்யச் சொல்லி அவர்களுக்கு வேண்டிய ஆற்றல்களை அருளுகிறான்.

**"மூவண்ணல் தன் சந்நிதி முத்தொழில்
இயற்ற வாளா மேவு அண்ணல்"**

என்று பரஞ்சோதி முனிவர் கூறுவார்.

உயிர்க் கூட்டங்கள் தம் வினைக்கு ஏற்ப உடம்பை எடுத்துப் பிறந்தும் வாழ்ந்தும் இறந்தும் மீண்டும் பிறந்தும் வருகிறார்கள். ஒவ்வோர் உயிரும் இவ்வாறு பிறவிச் சுழலில் சுழன்று வருகிறது. மகாப் பிரளய காலத்தில் எல்லா உயிர்களுக்கும் ஓய்வு கொடுப்பது போல இறைவன் சர்வசங்காரம் செய்கிறான். ஜலப் பிரளயம், அக்கினிப் பிரளயம் என்று பிரளயங்கள் பல வகைப்படும். உலகமெல்லாம் நீரில் அமிழ்ந்துகிடப்பது ஜலப் பிரளயம். தீயால் வெந்து அழிவது அக்கினிப் பிரளயம். காலாக்கினி ருத்திரர்களை அதிஷ்டித்து நின்று அக்கினிப் பிரளயத்தை நடத்துகிறான் இறைவன்.

இறைவன் அக்கினிப் பிரளயத்தை நிகழ்த்தும்போது எங்கே பார்த்தாலும் தீ மூண்டு நிறைந்து நிற்கிறது. தீக்கொழுந்துகள் பலபடியாகச் சீறி எழுந்து உலகை எரிக்கின்றன. அந்தர் மத்திய பாதலம் என்று சொல்லும் மூன்று தட்டாகிய உலகங்களும் அழலால் எரிந்து சாம்பலாகின்றன. அந்த மூன்று உலகங்களுக்கும் உள்ளே புகுந்து எல்லாப் பொருள்களையும் தனக்குள் அடக்கிக்கொண்டு அந்தச் செந்தீயின் அழலானது எழுந்து எரிகின்றது. அதன் நாக்குகளுக்கு அகப்படாத பொருள் ஏதும் இருப்பதில்லை. எங்கே பார்த்தாலும் தீயே நிறைந்து தன் வேலையைச் செய்கிறது. அவ்வாறு தீயை மூள விட்டு இந்த உலகங்களை அவன் எரித்துவிடுகிறான்.

இவ்வாறு உலகையே அழித்துச் சுடும் அந்த அக்கினி பிறகு அடங்கிவிடுகிறது. பிரபஞ்சம் மீண்டும் தோற்றுகிறது. மறுபடியும் உலகத்தில் உயிர்கள் பிறக்கின்றன. எரிந்த சோலை மீண்டும் தழைத்து அடர்ந்து வளர்வது போல உலகம் மறுபடியும் உயிர்கள் வாழும் இடமாக அமைந்து காட்சி அளிக்கிறது. பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் ஒன்று விடாமல் எரித்த அந்தத் தீ என்ன ஆயிற்று? மறுபடியும் பிரளயம் வந்தால் அது எழுந்து பரந்து தன் வேலையைச் செய்ய வேண்டுமே; இப்போது அது எங்கே போயிற்று?

ஒருகால் அந்தப் பெரிய தீயை உலகம் ஏழிலும் அங்கங்கே மறைத்து வைத்திருக்கிறானோ? கோட்டைக்குள் மறைந்து நின்ற வீரர்கள் போர் வந்தால் திடீரென்று மறைவிடத்திலிருந்து எழுந்து வந்து போர்க்களத்தில் புகுந்து அமர் செய்யப் புகுவார்களே, அது போல அந்தத் தீ மீண்டும் பிரளய காலம் வரும் வரை அங்கங்கே மறைந்திருக்கிறதோ? அதை இந்த ஏழுலகத்திலும் மறைத்து வைத்திருக்கிறானோ, இறைவன்? இந்தக் கேள்வியை இறைவனிடமே கேட்கிறார் காரைக்கால் அம்மையார்.

**மறைத்து உலகம்
ஏழினிலும் வைத்தாயோ?**

உலகத்துக்குள் மறைந்திருந்து வேண்டும்போது வெளிப்படும் அந்தத் தீ உலகம் ஜலப் பிரளயத்தில் அமிழ்ந்து போகும்போது அதுவும் அமிழ்ந்து அணைந்து போகாதா? அழிக்கும் பொருள் அழிக்கப்படும் பொருளுக்குப் புறம்பே இருந்தால்தான் எளிதில் அழிக்க முடியும். ஆகையால் அந்தச் செந்தீ அழல் பிரபஞ்சத்துக்கு அப்பால் வேறு ஓரிடத்

தில் இருப்பதுதான் பொருத்தமாக இருக்கும். இதை அறிந்து அதை அதன் வெம்மை சிறிதும் குறையாமல் உறைப் போடு இருக்கும்படி பாதுகாப்பான இடத்தில் வைத்திருக்கிருனே? அந்த இடம் எது? ஓ! இறைவன் அதனைத் தன் திருக்கரத்தில் வைத்திருக்கிருன். தீயை ஏந்தி ஆடும் பெருமான் அல்லவா அவன்?

முன்காலத்தில் தீக்குச்சி இல்லை. அத ஞல் நெருப்பைப் பாதுகாத்து வைப் பார்கள். ஓமச் சட்டியில் பொதிந்து வைத்திருப்பார்கள். அந்தணர்கள் நாள் தோறும் அக்கினி காரியம் செய்வார்கள். அதனுல் அக்கினியைப் பாதுகாத்து வைப்பார்கள். பிறருக்கு அதிலிருந்து நெருப்பை உதவுவார்கள். அக்கினி காரி யம் செய்து வரும் அந்தணன் இறந்து போனுல் அந்த அக்கினியைக் கொண்டே அவன் உடலை எரிப்பார்கள்.

பிறருக்கு நெருப்பைக் கொடுப்பது ஓர் உபகாரம்.

அவ்வாறு அக்கினியைப் பாதுகாத்து வைத்துப் பயன்படுத்துவது பழங்கால வழக்கம். அவ்வண்ணமே இறைவன் பிரளய காலத்தில் பயன்படுத்துவதற் காகச் செந்தீ அழலைத் தன் திருக்கரத் தில் ஏந்திப் பாதுகாப்பாக வைத்திருக் கிருனே?

**அன்றேல் உறைப்போடும்**
**உன்கைக் கொண்டாயோ?**

உலகத்தில் ஐந்து பூதங்களும் இருக் கின்றன. அவை வெவ்வேறு அளவில் கலந்து பிரபஞ்சமாக உருவெடுக் கின்றன.

**"நிலந்தீ நீர்வளி வெளியென ஐந்தும்**
**கலந்த மயக்கம் உலகம்"**

என்று தொல்காப்பியம் கூறுகிறது. அவ் வாறு மறைத்து வைத்திருக்கிருனு அழலை? அல்லது தன் கையில் எடுத்து வைத்துப் பாதுகாக்கிருனு?—இவ்வாறு கொண்ட ஐயத்தை இறைவனிடமே கேட்கிருர் அம்மையார்—

**மறைத்துஉலகம் ஏழினிலும்**
**வைத்தாயோ? அன்றேல்**
**உறைப்போடும் உன்கைக்**
**கொண்டாயோ?—நிறைத்திட்டு**
**உளைந்து எழுந்து நீ எரிப்ப**
**மூவுலகும் உள்புக்கு**
**அளைந்துஎழுந்த செந்தீ அழல்.**

எம்பெருமானே, சர்வப் பிரளய காலத்தில் பிரபஞ்சம் முழுவதும் நிறைந்து நின்று சீறி எழுந்து நீ எரிப்பதனுல் மூன்று உலகங்களிலும் கலந்து பொங்கி எழுந்த பிரளய காலாக் கினியாகிய செம்மையாகிய தீயின் கொழுந்துகளை மற்றக் காலங்களில் இந்த உலகம் ஏழினிலும் மறைத்து வைத்தா யோ? அல்லாமல் அதனை அதன் வெம் மையோடும் நின் திருக்கரத்தில் பாது காத்து வைத்தாயோ? இதனை எனக்குச் சொல்லியருள வேண்டும்.

[உலகம் ஏழினிலும் மறைத்து வைத் தாயோ என்று கூட்டுக. உறைப்பு-வெம்மை மிகுதி. நிறைத்திட்டு-எங்கும் தன் வெப்பத்தை நிறையச் செய்து. உளைந்து–கொழுந்துகளை எழுப்பிச் சீறி. உள்புக்கு-உள்ளே புகுந்து. அளைந்து-எங்கும் கலந்து. செந்தீ-செந்நிறத்தையு டைய தீ. அழல்-தீயின் கொழுந்து; அதன் வெப்பம் என்றும் சொல்லலாம். அழலை வைத்தாயோ, கைக் கொண்டாயோ என்று கூட்டி முடிக்க. நீ : எழுவாய். நீ எரிப்ப எழுந்த அழலை வைத்தாயோ, கொண்டாயோ என்று கூட்டுக.]

இறைவன் அழலேந்தி ஆடும் கோலத்தை நினைந்து இவ்வாறு பாடினுர்.

அற்புதத் திருவந்தாதியில் 97-ஆவதாக உள்ளது, இந்தப் பாட்டு. ★




# ஆளவந்தார்

நாடோடி

வைணவ சம்பிரதாயத்தின் முதல் ஆசாரியர் என்று கருதப்படும் நாதமுனிகளின் பேரர் ஆளவந்தார். அவர் இள வயதில் சிற்றரசர் போல் போக வாழ்வு வாழ்ந்து வந்தாரே தவிர, பாட்டனுர் தேடிய கடவுள் பக்தி என்ற செல்வத்தைத் தாமும் அடைந்து இன்புற வேண்டும் என்ற அவா அவருக்கு இருக்கவில்லை. நாதமுனிகளின் சீடர்களில் ஒருவரான உய்யக்கொண்டாரின் சீடர் மணக்கால் நம்பி, இந்த நிலையைப் போக்கி அவரை வைணவ வழியில் திருப்ப என்ன செய்யலாம் என்று யோசனை செய்தார். முதலில் தாம் ஆளவந்தாருக்கு அறிமுகமாக வேண்டும்; அதற்கு என்ன செய்யலாம் என்று யோசித்தார்.

ஆளவந்தாருக்குத் தூதுவிளங்கீரை மிகவும் பிடிக்கும் என்பது மணக்கால் நம்பிக்கும் தெரியும். அதனுல் தினம் தூதுவிளங்கீரை வாங்கி ஆளவந்தாரின் சமையற்காரரிடம் கொடுத்தார். சமையற்காரர் அதைச் சமைத்து ஆளவந்தாருக்குப் போட்டார்.

ஆனுல் ஆளவந்தார் தினம் கீரையை ருசித்துச் சாப்பிட்டாரே தவிர அதை யார் கொடுத்தது, அல்லது எங்கிருந்து வந்தது என்று கேட்கவில்லை. ஆறு மாதம் இப்படியே சென்றது.

இதனுல் மணக்கால்நம்பி ஒரு காரியம் செய்தார். ஒரு நாள் வழக்கம் போல் தூதுவிளங்கீரையை அனுப்பி வைக்கவில்லை. அதனுல் சமையற்காரருக்குக் கீரை கிடைக்கவில்லை. அதனுல் சமையலில் அன்று தூதுவிளங்கீரை இடம் பெறவில்லை.

சாப்பிட ஆரம்பித்த ஆளவந்தார், "ஏன் இன்று தூதுவிளங்கீரை பரிமாற வில்லை?" என்று கேட்டார்.

"வழக்கமாக ஒரு கிழவர் கீரை கொண்டு வந்து கொடுப்பார். அவர் இன்று கொண்டு வந்து கொடுக்கவில்லை" என்று பதிலளித்தார் சமையற்காரர்.

"அவர் யாரென்று தெரியுமா?"

"தெரியாது."

"அப்படியானுல் அவர் திரும்பவும் கீரை கொண்டு வந்தால் என்னிடம் அழைத்து வாரும்."

கீரையை நிறுத்தியும் பயனில்லாமற் போகவே மணக்கால்நம்பி திரும்பவும் ஒரு நாள் சமையற்காரரிடம் கீரையைக் கொண்டு போய்க் கொடுத்தார்.

"ஆளவந்தார் தங்களைப் பார்க்க விரும்புகிருர்" என்ருர் சமையற்காரர்.

ஆளவந்தாரும் மணக்கால்நம்பியும் சந்தித்தார்கள்.

"நீங்கள் தினம் எனக்குக் கீரை கொண்டு வந்து கொடுத்ததற்காக உங்களுக்கு ஏதாவது பொருள் வேண்டுமானுல் கேளுங்கள்" என்ருர் ஆளவந்தார்.

"நான் தங்களுக்குக் கொடுக்க வந்தேனேயன்றி வாங்க வரவில்லை" என்ருர் மணக்கால்நம்பி.

"எனக்கு உரிமையில்லாததை நான் தங்களிடமிருந்து எப்படிப் பெற்றுக் கொள்ள முடியும்?"

“உங்களுக்கு உரிமையுள்ள சொத்துத்தான்; உங்கள் பாட்டனுர் நாதமுனிகள் தேடிய பொருள்தான்.”

“அந்தப் பொருள் எங்கே இருக்கிறது?”

“திருவரங்கத்தில் இருக்கிறது. அங்கு வந்தால் காட்டுவேன்” என்ருர் மணக்கால்நம்பி.

சில நாள் கழித்து இருவரும் திருவரங்கம் சென்ருர்கள். திருவரங்கத்தில் பெருமாளேக் காட்டி, “இதுதான் தங்கள் பாட்டனுர் தேடிய செல்வம்” என்ருர் மணக்கால்நம்பி.

அவ்வளவுதான், உடனே ஆளவந்தார் மனம் மாறி, நாதமுனியின் பக்தி மதத்தைப் பரப்ப ஆரம்பித்தார்.

தமது விடாமுயற்சி வெற்றியடைந்தது கண்டு மனம் மகிழ்ந்தார் மணக்கால்நம்பி.

★

## ஸ்ரீ சைதன்யர்

ஸ்ரீ சைதன்ய மகாப்பிரபுவுக்கு அப்பொழுது பதினுறு வயதுதான் ஆகிக் கொண்டிருந்தது. அப்பொழுது எல்லாரும் நிமாயி என்று அவரை அழைப்பது வழக்கம். அந்தப் பதினுறு வயதுக்குள்ளேயே அவர் எல்லாச் சாஸ்திரங்களையும் கற்றறிந்து, நியாய சாஸ்திரத்தைப்பற்றி ஒரு நூலும் எழுதியிருந்தார்.

அவருடன் படித்த அவருடைய நண்பர் ரகுநாதர் என்பவரும் படிப்பில் மிகவும் கெட்டிக்காரர். அவரும் நியாய சாஸ்திரத்தைப்பற்றி ஒரு நூல் எழுதியிருந்தார்.

தாம் எழுதியுள்ளது போலவே தம் நண்பர் நிமாயியும் நியாய சாஸ்திரத்தைப்பற்றி ஒரு நூல் எழுதியுள்ளார் என்று கேள்வியுற்று, ஒரு நாள் ரகுநாதர், நிமாயியைப் பார்த்து, “நீயும் நியாய சாஸ்திரத்தைப்பற்றி ஒரு நூல் எழுதியிருக்கிருய் என்று கேள்விப்பட்டேன். அதை நான் பார்க்க வேண்டுமே!” என்ருர்.

அதற்கு நிமாயி, “அதற்கென்ன, நாளேக்குப் படகில் பாடசாலேக்குப் போவோம் அல்லவா? அப்பொழுது நானே படித்துக் காண்பிக்கிறேனே!” என்ருர்.

அடுத்த நாள் காலே கங்கையில் சென்றுகொண்டிருந்த ஒரு படகில் நிமாயியும் அவர் நண்பர் ரகுநாதரும் காணப்பட்டார்கள். நிமாயி தாம் எழுதின நியாய சாஸ்திரத்தை நண்பருக்குப் படித்துக் காட்டிக்கொண்டிருந்தார்.

நிமாயி படித்ததைக் கேட்கக் கேட்க ரகுநாதரின் கண்களில் நீர் பெருக்கெடுத்து ஓட ஆரம்பித்தது. இதைக் கவனித்த நிமாயி, “எதற்காக ரகுநாத் அழுகிருய்?” என்று கேட்டார்.

அதற்கு ரகுநாதர், “இல்லே நிமாயி, நான் என் நூல் மிகப் பிரசித்தமாக விளங்கப்போகிறது, எல்லாரும் என்னேப் புகழப்போகிருர்கள் என்று கோட்டை கட்டிக்கொண்டிருந்தேன். ஆனுல் உன் நூலேக் கேட்டதும் என் நூலே யாரும் சீந்தக்கூட மாட்டார்கள் என்பது நிச்சயமாகிவிட்டது. அதனுல்தான் என்னே அறியாமல் கண்ணீர் வந்துவிட்டது” என்ருர்.

“ப்பூ! இதற்குத்தாஞ அழுகிருய்! என் நண்பனுகிய உன் சந்தோஷத்திற்கும் பெருமைக்கும் என் நூல் தடையாக இருப்பதை நான் விரும்புவேஞ?” என்று சொல்லி, நிமாயி தமது நூலேக் கங்கை வெள்ளத்தில் தூக்கியெறிந்தார்.

நிமாயியின் மகத்தான தியாகத்தைக் கண்ட ரகுநாதர் ஒரு கணம் அயர்ந்து போய்விட்டார். “நிமாயி! நீ மனிதன் இல்லே, தெய்வம்!” என்று சொல்லி அவர் காலில் விழப்போனுர். ஆனுல் நிமாயி நண்பரைத் தடுத்து, அவரைக் கட்டித் தழுவிக்கொண்டார்.

★





# மன அலைகளின் ஆற்றல்

ஆர். நிவேதிதா

**விவேகானந்தரின் வாக்கு**

''யோகியாகத் திகழ்ந்த ஒருவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்து எண்ணிய நல்ல எண்ணங்கள், அவரது ஆன்மிகச் சிந்தனைகள் வான வீதியில் மிதந்தபடியே இருக்கின்றன. அந்த எண்ணங்களுடன் பொருந்தும் மனப்பான்மை கொண்ட ஒரு மனிதன் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு பிறக்கிறுன் என்று வைத்துக் கொள்வோம். அவன் அப்போதும்கூட ஆகாயத்தில் மிதந்துகொண்டிருக்கும் யோகியின் எண்ண அலைகளுடன் தொடர்பு கொள்ள முயன்ருல், அந்த யோகியின் சிந்தனைகள் இந்த மனிதனின் எண்ணங்களுடன் கலந்து இவனுக்கு அவை உதவி புரிகின்றன'' என்று சுவாமிஜி குறிப்பிட்டிருக்கிருர்.

மேற்கூறிய விவேகானந்தரின் கருத்துக்கு ஓர் உதாரணமாக யோகி அரவிந்தரின் வாழ்க்கையில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி விளங்குகிறது.

**அரவிந்தரின் வாழ்க்கையில்**

அரவிந்தர் அப்போது யோகி என்று பிரபலமாகாத நேரம். அவர் தமது உள்ளத்தில் மூழ்கும் ஆன்மிக முயற்சிகளை அப்போது மேற்கொண்டிருந்தார். அந்தச் சமயத்தில் தமக்கு நேர்ந்த ஓர் அநுபவத்தை அரவிந்த யோகி பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிருர்:—

''நான் அப்போது அலிபூர் சிறைச்சாலையில் இருந்தேன். என்னிடம் கீதையும் உபநிஷத நூல்களும் வைத்திருந்தேன். எனக்குச் சந்தேகங்களும் மனச்சோர்வுகளும் ஏற்படும் போதெல்லாம் கீதையைப் படித்து ஆறுதல் அடைவேன். கீதை சொல்லும் யோகமுறையையும், உபநிஷதங்கள் கூறும் தியானமுறையையும் நான் அப்போது நாள்தோறும் பழகி வந்தேன். ஆன்மிகப் பயிற்சிகளைப் பழக முற்படும்போது எனக்குப் பல சந்தேகங்கள் தோன்றும். ஆன்மிக வாழ்வில் எவ்விதம் வாழ வேண்டும், என்ன என்ன செய்ய வேண்டும் என்று நான் தீவிரமாகச் சிந்தித்தேன். அத்தகைய சிக்கலான சந்தர்ப்பங்களில் சுவாமி விவேகானந்தர் எனக்கு வேண்டிய குறிப்புக்களை என் அருகில் அமர்ந்து சொல்லிக் கொண்டே வருவது போல அவரது குரலை நான் கேட்டிருக்கிறேன். எனது ஆன்மிக முன்னேற்றத்திற்குத் தேவையான யோசனைகள் வழிமுறைகள் போன்றவை அனைத்தையும் கூறி முடித்த பிறகு சுவாமி விவேகானந்தரின் அந்தக் குரல் தானே நின்றுவிடும்.



''மேலும், நான் தியானம் செய்யும் பொழுது, சுவாமி விவேகானந்தரும் என்னுடன் அந்த அறையில் பல நாள் இருந்திருக்கிருர். அவருடைய அந்த உடலற்ற சாந்நித்தியம் என்ற இருப்புத் தன்மையை நான் அப்போது உணர்ந்திருக்கிறேன். எனக்குத் தேவையான ஆன்மிக வாழ்க்கையைப் பற்றிய எல்லாக் கருத்துக்களையும் நான் அந்தச் சமயத்தில் விவேகானந்தரிடமிருந்து பெற்றிருக்கிறேன்.''

மேற்கூறிய யோகி அரவிந்தரின் வாக்கிலிருந்து, அரவிந்தரின் எண்ண அலைகள்

சுவாமி விவேகானந்தரிடம் தொடர்பு கொண்டதை அறிகிறோம்.

**எண்ண அலைகள்**

ஒரு மகான் இருந்தார். அவர் முன்னால் பலர் உட்கார்ந்திருந்தார்கள். மகான் அந்த இடத்தில் விதம் விதமான எண்ண அலைகள் மிதந்து செல்வதைத் தெளிவாகவே பார்த்தார். ஓர் ஆன்மிக எண்ண அலை மிதந்து வந்தது. அது ஒவ்வொருவரையும் கடந்து சென்றது. பலரது உள்ளங்கள் அந்த ஆன்மிக அலையைக் கிரகிக்காமல் புறக்கணித்து விட்டன. அதாவது ஏற்க மறுத்து விட்டன. இதை அந்த மகான் கண்டார்.

அதே அலை குறிப்பிட்ட ஒருவரை அடைந்தபோது அந்த ஒருவரின் மனம் பலரால் ஏற்க மறுக்கப்பட்ட அதே ஆன்மிக அலையைக் கிரகித்துவிட்டது.

அது போலவே இசை சம்பந்தப்பட்ட அலை, வியாபாரம் சம்பந்தப்பட்ட அலை, சிற்றின்பமயமான அலை, மற்றும் மருத்துவம், இலக்கியம், பொருளாதாரம், கலை தொடர்புடைய எண்ண அலைகளும் அங்கே மிதந்து சென்றன.

சிற்றின்பம் சம்பந்தப்பட்ட அலை, ஆன்மிக அலையைக் கிரகித்த அன்பரைச் சென்றடைந்தது. ஆனால் அந்தச் சிற்றின்ப அலையை அந்த அன்பரின் மனம் கிரகிக்காமல் ஏற்க மறுத்து விட்டது.

சிற்றின்ப அலை மேலும் மிதந்து சென்று அங்கிருந்தவர்களில் ஒருவனை அடைந்தபோது அவனது மனம் அதைக் கிரகித்துவிட்டது. அது சம்பந்தமான எண்ணங்களையே அவன் திரும்பத் திரும்ப நினைத்தான்.

உதாரணத்திற்காக, இரண்டு விதமான அலைகளைப்பற்றி மட்டும் மேலே குறிப்பிடப்பட்டது.

உலகில் எல்லா விதமான எண்ண அலைகளும் மிதந்துகொண்டிருக்கின்றன. நமது இயல்புக்கு ஏற்பவும் அவ்வப்போது ஏற்படும் மனநிலைக்கு ஏற்பவும் அந்த அந்த எண்ண அலைகளை நாம் கிரகிக்கிறோம்.

இசைபற்றிய எண்ண அலை ஒன்று செல்கிறது என்று வைத்துக்கொள்வோம். அதில் ஐந்து சதவீதம் மட்டும் ஒருவர் கிரகித்துக்கொண்டு மற்றதை விட்டுவிடக் கூடும். இது போலவே நம் இயல்புக்கு ஒத்து வரக் கூடியதை நாம் கிரகிக்கிறோம், ஒத்து வராததை விலக்கிவிடுகிறோம். அல்லது குறிப்பிட்ட எண்ண அலையில், நம் இயல்புக்கு ஏற்ற அளவில் ஏற்றுக்கொண்டு மற்றப் பகுதியை ஏற்காமல் புறக்கணிக்கிறோம்.

''சரியான பயிற்சி பெற்ற மனம் ஒரு போதும் தவறு செய்வதில்லை'' என்கிறார் விவேகானந்தர். ஒரு மகான் அல்லது உத்தமச் சாதகனின் மனம் தெய்விகச் சிந்தனைகளில் பழக்கப்பட்டிருக்கும்.



அத்தகைய மனம் அருள்மயமான எண்ணங்களை மட்டும் கிரகிக்கும்; காமம், கோபம் போன்ற இழிந்த இயல்புகளை இயல்பாகவே ஏற்றுக்கொள்ளாமல் புறக்கணித்துவிடும்.

எனவே நம்மை நாம் தூய்மைப்படுத்திக்கொண்டால் மட்டுமே, தூய்மையின் பொருட்டு மனப்பூர்வமாக முயன்றால் மட்டுமே, தூய்மை வாய்ந்த எண்ண அலைகள் நம்மில் புகுந்து நம் மயமாக ஆகும்.

அவ்விதம் இன்றி, மிருக இயல்புகளை நம்மிடமிருந்து விலக்க நாம் முயற்சி செய்யாவிட்டால், கேடு விளைவிக்கக் கூடிய, நம்மைப் பந்தத்துக்கு ஆளாக்கக் கூடிய எண்ண அலைகள் நம்முள் புகுந்து நம்மை ஆக்கிரமித்துக்கொண்டுவிடும்.

[அடுத்த இதழில் முடியும்]

# வேதாந்தச் சிந்தனை

## உலகம் உண்மையல்ல - அஜாதவாதம்

வி. ஆர். கணேசன்

கனவு நிலையில் காணும் பொருள்களும் அனுபவங்களும், விழிப்பு நிலையில் உண்டாகும் அனுபவங்களும் உண்மையல்ல (மித்யா) என்பதனால், சித்தத்தில் 'இந்த மித்யா சித்திரமும் அனுபவமும் உண்டுபண்ணுபவன் யார்? பார்ப்பவன் யார்?' என்ற கேள்விகள் எழுகின்றன. ஸ்ரீ கௌடபாதர் இதற்குப் பின்வரும் பதில் கூறுகிறார்—

கல்பயத்யாத்மநாத்மாநம்
ஆத்மா தேவ ஸ்வமாயயா।
ஸ ஏவ புத்யதே பேதாநிதி
வேதாந்தநிச்சய:॥ (2-12)

'(ஸ்வயம்பிரகாசமாகிய) தூய உணர்வாகிய ஆத்மா, தன் மாயையினாலேயே பல பொருள்களுள்ள உலகத்தைக் கற்பனை செய்து வெளிப்பொருள்களையும் உட்பொருள்களையும் சிருஷ்டித்து, பார்ப்பவனும் அனுபவிப்பவனுமாகச் செயற்படுகிறது.'

இவ்வாறு உலகப் பொருள்களைப் பலவாகவும் பின்னமாகவும் காண்பதனால், இந்தப் பேத பாவனையால்தான் சுகம் துக்கம், விருப்பு வெறுப்பு முதலிய இரட்டைக் குணங்கள் தோன்றி, பிறப்பு இறப்புக் கூடிய சம்சாரச் சுழலில் அகப்பட்டுக்கொண்டு ஆத்மா கட்டுபட்டிருப்பதாகத் தோன்றுகிறது.

நாம் உலகத்தைக் காண்கிறோம். பலவித அனுபவங்களையும் பார்க்கிறோம். இவையெல்லாம் உண்மை போலத்தானே தோன்றுகின்றன? ஆனால், அறியாமையாகிய திரையால் உண்மை மறைக்கப்பட்டு, இந்தத் தோற்றம் உண்டாகிறது என்பதற்கு வேதாந்தத்தில் பல உதாரணங்கள் உள்ளன. இவற்றில் சிலவற்றை, கௌடபாதர் சுட்டிக் காட்டுகிறார்.

பூமாலையையோ கயிற்றையோ பாம்பாகக் கருதிப் பயப்படுகிறவர்களை வாழ்வில் பல முறை பார்த்திருக்கலாம். அதே மாதிரி கம்பத்தையோ மரத்தையோ பூதம் பிசாசு என்று எண்ணிப் பயப்பட்டு மயங்கி விழுந்திருப்பவர்களையும் கண்டிருக்கிறோம். அப்படிப் பயப்படுபவர்களின் மனதில் விதம்விதமான கற்பனைகள் உண்டாகி, சொல்ல முடியாத கொந்தளிப்பு உண்டாகி, அவர்கள் உண்மையாகவே பாம்பையும் பூதத்தையும் கண்டு உடம்பு நடுங்கி வேர்த்துவிட்டு நிற்கிற நிலையில், விளக்கு வெளிச்சத்தைக் காட்டி உண்மையைப் புலப்படுத்தினால் அவர்கள் நிலை எப்படி இருக்கும் என்று எண்ணிப் பார்க்கலாம். பாம்பும் பூதமும் தாற்காலிக உண்மைதான். உண்மை தெரிந்தபிறகு மாலையும் கம்பமும்தாம் நிரந்தர உண்மை; மாலையும் கம்பமும் இல்லாமல் அந்தத் தாற்காலிக உண்மை-அனுபவம்கூட உண்டாக முடியாது.

அதே மாதிரி தன்னுள் இருக்கும் ஆத்மா-பரமாத்மாவின் ஐக்கியத்தை உணர்ந்து, உலகப் பொருள்களால் உண்டாகும் அனுபவங்கள் தாற்காலிக உண்மைதான், பரமாத்மாதான் எல்லா வெளிப் பொருள்களுக்கும் உட்பொருள்களுக்கும் ஆதாரம் (நிரந்தர உண்மை) என்று உணர்ந்த மாத்திரத்திலேயே மயக்கம் தெளிந்துவிடும்.

தூய சித்தமும் யோகசித்தியும் படைத்தவனுக்கு இந்தத் தூய மெய்யுணர்வு வந்தவுடன், 'உலகப் பொருள்களெல்லாம் மாயையின் மயக்கத்தால் பலவேறாகக் காண்கின்றன; எல்லாவற்றிற்கும் ஆதாரமானது அந்தப் பரம் பொருள் ஒன்றேதான்; அது நிரந்தரமான உண்மையானதால், ஒன்றும் உண்டாவதில்லை, அழிவதுமில்லை, கட்டுப்படு

வதுமில்லை, கட்டிலிருந்து விடுதலையடைவதுமில்லை; பரம்பொருள் அத்வைதமே; தானே பரம்பொருள்தான்' என்ற அறிவு உண்டாகிறது. முக்திக்கு வேறு வழி தேடவும் வேண்டுமா? அவனே ஞானியாகிறுன்.

இந்த உண்மையை, கௌடபாதர் பின்வருமாறு கூறுகிறுர்—

ந நிரோதோ ந சோத்பத்திர்
ந பத்தோ ந ச ஸாதக:।
ந முமுக்ஷுர் ந வை முக்த:,
இத்யேஷா பரமார்த்ததா॥ (2-32)

அழிவு இல்லை, பிறப்பு இல்லை, கட்டுண்டவன் இல்லை, சாதகன் இல்லை; மோட்சத்தை விரும்புகிறவனும் இல்லை, முக்தியடைந்தவனும் இல்லை. இதுதான் முற்றிலும் உண்மை, பேருண்மை.

கௌடபாதாசாரியார் பரம்பொருள் அத்வைதம்; அது ஒன்றே உண்மை என்பதை, வெவ்வேறு அனுபவங்களாலும் உதாரணங்களாலும், ச்ருதிப் பிரமாணத்தாலும் (முக்கியமாக ப்ருஹதாரண்யக உபநிஷதத்திலிருந்தும், தைத்திரீய உபநிஷதத்திலிருந்தும்), தர்க்கத்தாலும் ஆராய்ந்து எடுத்துக் காட்டுகிறுர்.

முதலில் ஆகாசத்தையும் பிரம்மத்தையும் ஒப்பிட்டு, குடம் முதலிய உதாரணத்தால் ஜீவ-ஈச்வர பேதம் உபாதியினுல்தான் காணப்படுகிறது என்று காட்டுகிறுர். விதம் விதமான மண்பாத்திரங்கள் இருந்தபோதிலும் அவற்றுக்குள் இருக்கும் ஆகாசம் வெளி ஆகாசத்தினின்றும் வேறுபட்டதாகுமா? குடத்தினுள் இருப்பது குட-ஆகாசம், கூஜாவினுள் இருப்பது கூஜா-ஆகாசம், பெரிய பானையினுள் இருப்பது பானை-ஆகாசம், கோப்பையில் இருப்பது கோப்பை-ஆகாசம் என்று உருவத்திற்கும் பெயருக்கும் வண்ணத்திற்கும் ஏற்றவாறு கூறலாம். ஆனுல் அவை உடைந்தால் வெளி ஆகாசத்துக்கும் அவற்றுக்குள் கட்டுப்பட்டிருந்த ஆகாசத்துக்கும் ஒரு வித வித்தியாசமும் இல்லை அல்லவா?

மேலும், இந்த மண் பாத்திரங்களுக்குள் உள்ள ஆகாசம் வெளி ஆகாசத்தின் ஒரு பாகம் என்று சொல்வதும் தவறு. ஏனெனில், குடத்தை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குக் கொண்டு போனுல், முதலில் இருந்த குட-ஆகாசத்தை அடக்கி வேறு இடத்துக்கு எடுத்துச் செல்ல முடியாது என்பது தெளிவானதே. குடத்தில் இருக்கும் ஆகாசம் புகையினுலோ அல்லது தூசி



முதலிய அழுக்கான வஸ்துக்களாலோ கெட்டுப்போவதில்லை. அதே மாதிரி, பல உடல்களிலும் புகுந்துள்ள ஜீவன்கள், குடம் முதலியவற்றிலுள்ள ஆகாசம் மாதிரிதான் உள்ளன. பல உருவங்களாலும் பெயர்களாலும் வெவ்வேருக அறியப்பட்டபோதிலும், ஒரே ஆத்மா தான் பலவாருகத் தோற்றமளிக்கிறது. கர்மப் பலன்களினுல் உண்டாகும் பல விதமான சுக-துக்க அனுபவங்களால் ஆத்மா ஒரு மாறுதலும் அடைவதில்லை. குடம் முதலிய பல பாத்திரங்களில் இருந்தபோதிலும் ஆகாசத்தை எவ்வாறு பல பாகங்களாகப் பிரித்து வைக்க முடியாதோ, அதே போல் ஜீவன் பல உடல்களில் இருந்த போதும், பரமாத்மாவின் வெவ்வேறு அம்சங்கள் என்று சொல்லவும் முடியாது.

ஆகாசமும் ஆத்மாவும் மாறுதலின்றி இருப்பதனுலும், எங்கும் பரவியிருப்பதனுலும், என்றும் நிலைத்துப் பிறப்பு இறப்பற்று இருப்பதனுலும்,

கெடுதி செய்துதான் ஒரு காரியத்தில் வெற்றி பெற வேண்டுமென்றுல் அந்தக் காரியத்தையே விட்டுவிடுவது நல்லது. —ஔவையார்.

மாக அடையாமலிருப்பதனுலும் பல விதங்களில் ஒப்பிட்டுக் கூறப்படுகிறது.

ஆத்மா அறியாமைத் திரையால் மறைக்கப்பட்டு, ஜீவன் உடல் புலன்களுடன் இணைந்து கொள்வதனுல் தான் பிறப்பு, இருப்பு, வளர்ச்சி, நோய், தேய்வு, அழிவு முதலான ஆறுவித மாறுதல்களுக்கு உள்ளாகி, இன்ப துன்பங்களை அனுபவிப்பது போல் தோன்றுகிறது. இதைத்தான் கௌடபாதர் படிப்படியாக உபநிஷதங்களில் கூறிய தத்துவங்களின் மூலம் எடுத்துக் காட்டுகிருர்—



"தைத்திரீய உபநிஷத்தில் ஆகாசத்தை உதாரணமாகக் கொண்டு அன்னமய கோசம் முதல் தொடங்கி, பஞ்ச கோசங்களிலுள்ள ஜீவனும் பரப்பிரம்மமும் ஒன்றேதான் என்று தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

''ஜீவாத்மாவும் பரமாத்மாவும் வேறுபட்டவையல்ல என்ற தத்துவத்தை அவற்றின் ஐக்கியத்தைக் கூறும் முறையாகச் சொல்லியிருக்கிறது அல்லவா? ஜீவன்கள் பல வகைப்பட்டன, பிரம்மத்தினின்றும் வேறுபட்டவை என்று கூறுவதைக் கண்டனமும் செய்திருப்பதனுலும் இந்த உண்மையை அறிவது சுலபமாகிறது.'' ★

# செய்திகள்

ஃ ஜனவரி 26-ஆம் நாள் செங்கம், ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த மன்றத்தில் டாக்டர் பாஸ்கர் தலைமையில் எட்டு மருத்துவர்களால் இலவச பல் மற்றும் பொது மருத்துவ சிகிச்சை முகாம் நடத்தப் பெற்றது. ஒரு நாள் முழுவதும் நடைபெற்ற இந்த முகாமில் 609 பேர் பயனடைந்தனர்.

ஃ சென்னை, தி. நகர் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆச்ரமத்தில் ஜனவரி 28-ஆம் நாள் பூஜ்ய ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ் அவர்களால் புதிய நூலகக் கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டப் பெற்றது.

ஃ ஜனவரி 31-ஆம் நாள் இரவு 7-30 மணிக்கு சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் 'ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுத மொழிகள்' நூல் வெளியீட்டு விழா நடைபெற்றது. பூஜ்ய ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ் அவர்கள் அமுதமொழிகள் நூலை வெளியிட்டு குழுமியிருந்த பக்தர்களுக்கு அருளுரை வழங்கினர்.

ஃ ஜனவரி 31-ஆம் நாள் மாலை 4 மணிக்கு வேலூர், ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மன்றத்தின் சார்பாக விவேகானந்த ஜயந்தி விழா சிறப்பாக நடைபெற்றது. சுவாமி விபுதானந்தர், சுவாமி குமாரானந்தர், மகா நாராயண சுவாமி ஆகியோர் உரை நிகழ்த்தினர்.

ஃ அலகாபாத் திரிவேணி சங்கமத்தில் ஜனவரி 14 முதல் பிப்ரவரி 15 வரை நடைபெற்ற 'மகா மேளா'வில் யாத்திரிகர்களுக்காக ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் சார்பாக ஒரு மாதம் மருத்துவ முகாம் நடத்தப்பெற்றது.

ஃ அலகாபாத், ஸ்ரீராமகிருஷ்ண மடம் பிப்ரவரி 20-ஆம் தேதி ஸ்ரீராமகிருஷ்ண விவேகானந்த இளைஞர் மாநாடு நடத்தியது. இதில் 250 கல்லூரி மாணவர்கள் பங்கேற்றனர்.

ஃ பம்பாய், ஸ்ரீராமகிருஷ்ண மடம் ஜனவரி 30, 31 தேதிகளில் ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மாநாடு நடத்தியது. இதில் 350 இளைஞர்கள் பங்கேற்றனர்.



அருள் நெறிக் கதை

# அழியாத இளமைக்கு மருந்து

'ஹரிணீ'

> விறுவிறுப்பான இந்தக் கதையிலே வரும் ஒவ்வொரு பாத்திரமும் ஒவ்வொரு விதத்தில் சிறந்து விளங்குகிறுர்கள்.
>
> சசிகலேயின் முடிவு, முடிந்த உண்மைக்கு ஓர் எடுத்துக்காட்டு.

**பே**ரழகியான சசிகலேயை ஒரு தேவ கன்னிகை என்றுதான் உலகம் நினேத்தது. சிறிதளவுகூடக் குன்ருத, மாருத அவளுடைய எழில் வடிவம் யாவரையும் பிரமிக்கச் செய்தது.

அவள் வாடாத மலரைப் போல் வசீகரம் மிக்க கட்டழகியாகத் தோற்றமளித்தாள்.

அவளுடைய யௌவனத்தில் எப்போதாவது சிறிதளவு மாற்றம் காணப்பட்டால், உடனே அவள் ஏதோ ஒரு சக்தியினுல் புதிதான யௌவனத்துடன் அன்று மலர்ந்த மலரைப் போலக் காணப்படுவாள். ஊரெங்கும் இந்த அதிசயத்தைப்பற்றித்தான் பேச்சு.

பாடலிபுரத்திலிருந்து சீனதேசம் வரையிலும் அவளுடைய இணயற்ற அழகின் கீர்த்தி பரவியிருந்தது.

பொன்னுசைக்கு அடிமையான கனிஷ்கன் பல நாடுகளே வென்று, ரத்தினங்களேயும் தங்கக் கட்டிகளேயும் கொண்டுவந்து புருஷபுரத்தின் பொக்கிஷத்தை நிரப்பினுன். திக்விஜயத்திலிருந்து திரும்பி வந்த கனிஷ்கன், கவர்ச்சிக் கன்னி சசிகலேயின் மடியிலேதான் இளேப்பாறினுன்.

சக்கரவர்த்தி கனிஷ்கனின் குரு பார்சுவன், வசுபந்து முதலான பெரியோர்களும்கூடச் சசிகலேயின் பேரழகில் மயங்கினவர்கள்தாம். உலகத்தையே அடக்கி ஆண்ட சக்கரவர்த்தி, கட்டழகி சசிகலேயின் அன்புக்காகக் கையேந்தி நின்ருன். அரசனேயே தன் இளமையினுல் அடிமைப்படுத்திய சசிகலே அன்றைய தினம் சரகருடைய மருத்துவச்சாலேயில் அவருடைய அருளே நாடிக் காத்திருந்தாள்.

காலே ஏழு மணி. சரகருடைய வைத்திய சாலேயில் மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. அந்தக் கூட்டத்தில் உலகத்தையே தன் அழகால் அடிமைப்படுத்திய பேரழகி சசிகலேயைக் கவனிப்பவர் யாருமில்லே. தாழ்வாரத்தின் கடைசியில் அவள் ஒதுக்குப் புறமாக மறைந்து உட்கார்ந்திருந்தாள். அப்போது சரகர் ஏழைக் குஷ்டரோகிகளே மிகவும் ஆதரவாகக் கவனித்துச் சிகிச்சை செய்துகொண்டிருந்தார்.

அந்திவேளே நெருங்கிக்கொண்டிருந்தது. சசிகலேயின் அருகில் வந்து நின்ற வேலேக்காரன், ''அம்மணி! உங்கள் பெயரைச் சொல்லுங்கள்; மகரிஷியிடம் தெரிவிக்கிறேன்'' என்ருன்.

''எனக்கு அவசரமில்லே. இந்த மக்கள் வெள்ளம் வற்றட்டும். நான் அவரைத் தனியே சந்திக்க வேண்டும்.''

''அம்மணி! பெயரைச் சொன்னுல் சமயம் கிடைத்தபோது அவரிடம் தெரிவிப்பேன்.''

''தேவி சசிகலே தங்கள் அருளே நாடி வந்திருக்கிருள் என்று சொல்லு.''

அந்தப் பெயரைக் கேட்டதும் வேலேக்காரன் பிரமித்து நின்ருன். பிறகு உள்ளே சென்ருன்.

அந்தி மயங்கும் நேரம். சூரியனுடைய கடைசிக் கிரணங்கள் தேவி சசிகலையின் கன்னத்தைச் சிவப்பாக்கிக் கொண்டிருந்தன. அவள் தன்னையே மறந்தவளாகச் சிந்தனையில் மூழ்கியிருந்தாள்.

''புருஷபுரத்தின் சௌந்தரிய தேவதைக்கு நல்வரவு!''

கம்பீரமான குரல் சசிகலையின் சிந்தனையைக் கலைத்தது. அவள் திடுக்கிட்டு எழுந்தாள். முகத்தில் சாந்தமான புன்னகை தவழ, சரகரின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டாள்.

''சசிகலா! என்ன விஷயம்? ஏன் வந்தாய்?''

''மகரிஷி! அருள் பாலிக்க வேண்டும். புகழ், துன்பத்தின் பிறப்பிடம். அது போலவே இளமையும். வயோதிகத்தின் அன்னை உடல்தளர்ச்சி. சுகபோக இச்சையிலிருந்து என்னை என்னால் விடுபடச் செய்ய இயலவில்லை. தங்கள் தயவை நாடி வந்திருக்கிறேன்.''

மகரிஷி மெல்லச் சிரித்தார். பிறகு குரலில் மென்மை தவழ, அதே நேரத்தில் அழுத்தம் கொடுத்து, ''பெண்ணே! காலத்தின் ஓட்டத்திலிருந்து ஒருவராலும் தப்பவே முடியாது. நீயும் அதற்கு விலக்கல்ல. ஆகவே அதற்கு உன்னை அர்ப்பித்துக் கொள்ளுவதுதான் அறிவுடைமை'' என்றார்.

சசிகலையின் முகம் வாட்டமடைந்தது. முன் நெற்றியில் புரண்ட அழகான கூந்தலை மெல்ல ஒதுக்கியபடியே, ''மகரிஷி! என்ன முயன்றும் என்னால் ஆசையை அடக்க முடியவில்லையே! இந்த ஒரே ஒரு முறை மட்டும் இழந்த இளமையைப் பெற அருள் பாலியுங்கள். இனித் தங்களை நாடி வரமாட்டேன்'' என்று மன்றாடினாள்.

மகரிஷி சரகரின் கண்கள் சிவந்தன. ''பெண்ணே! பத்து ஆண்டுகளுக்கு முன்பு நீ வந்தபோது நான் சொன்னதை மறந்து விட்டாயா?'' என்று கேட்டார்.

''இல்லை, மறக்கவில்லை, ஐயனே! 'பெண்ணே, சுகபோகத்துக்கு முடிவு இல்லை. உடலுக்கு மன ஓட்டத்துடன் கலக்கும் சக்தி கிடையாது' என்று தாங்கள் கூறியதை நான் மறக்கவில்லை; அதை அனுபவத்திலும் அறிந்துகொண்டேன். என்றாலும் இன்னும் ஒரே ஒரு முறை மட்டும் எனக்கு அனுக்கிரகம் செய்யுங்கள். அதன் பிறகு நான் தங்களிடம் வரவே மாட்டேன்'' என்று கூறி, அவரது பாதத்தில் தலைவைத்து வணங்கினாள்.

சரகர் மௌனமாக நடந்து வெளியே சென்றார். வடிவழகி சசிகலை தலைகுனிந்தபடியே அமர்ந்திருந்தாள். மீண்டும் ஒரு முறை உலக மக்களைத் தன் அழகினால் அதிசயத்தில் ஆழ்த்த விரும்பியது அவள் மனம். அவள் கற்பனை உலகத்திலே சஞ்சரிக்கலானாள். அவளது தோழிகள் அவளது யௌவனத்தைக் கண்டு பிரமித்து நிற்கின்றனர். மறுபடியும் அவளுடைய வீட்டில் காற்சலங்கைகளின் ஒலி, ஆனந்த நாட்டியம், இனிமையான கானம், சிற்றின்பப் பெருவெள்ளம்— இவற்றின் கோலாகலம் நிறைந்திருக்கிறது. உலகத்து வாலிபச் சங்கமே கட்டழகியான அவள் காலடியில் விழுந்து கிடக்கிறது. இடையறாத ஆனந்தக் கேளிக்கை.

கற்பனைக் காட்சியில் ஈடுபட்டு மயங்கிக் கிடந்த கவர்ச்சிக் கன்னி சசிகலையின் செவியில் ஒரு கம்பீரக் குரலொலி, ''எதுவரை?'' என்று கேட்டது. சுற்றிலும் கவனித்தாள். ஒருவருமே தென்படவில்லை. சிறிது நேரத்

உண்மையே பேச வேண்டும். இனிமையானவற்றையே பேச வேண்டும். உண்மையாயினும் இனிமையற்றதைப் பேசக் கூடாது. இனிமையாயினும் பொய்யைச் சொல்லக் கூடாது—இது வேத சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள தர்மமாகும்.

—ஸ்கந்த புராணம்



> எவன் ஒருவன் தன் அறிவின் அகந்தையால் பிறரை அவமதிக்கிருனே, அவன் மந்தபுத்தியுடையவன். —சமண மதம்

திற்குப் பிறகு மறுபடி அதே கேள்வியின் ஒலி கேட்டது.

அப்போது அவளுடைய உள்ளத்தில் தாங்க முடியாத வேதனை ஏற்பட்டது.

''எதுவரை இது போன்ற சாதனங்களால் இயற்கையின் ஓட்டத்துடன் போட்டியிடப் போகிருய், சசிகலா?''

மகரிஷியின் குரல் கம்பீரமாக ஒலித்தது. சசிகலா திடுக்கிட்டாள். சற்று முன்பு இதே கேள்வியை அவளுடைய அந்தராத்மா கேட்டது. இப்போது வெளியேயும் அதே கேள்வி. என்ன பதில் சொல்வதென்று அவளுக்குத் தெரியவில்லை. அவள் முகம் பயத்தினுல் விகாரமடைந்தது. நிமிர்ந்து பார்த்தாள். மறுவிநாடி சரகரின் கையிலிருந்த சிவப்பு நிறமுள்ள திராவகத்தைக் கண்டதுமே அவள் முகத்தில் மகிழ்ச்சி பொங்கியது.

''மகான் சரகருடைய மருந்துச்சாலையில் எதுவரை இந்த அதிசய மருந்து இருக்கிறதோ அதுவரை'' என்று அவள் மெல்ல முணுமுணுத்தாள்.

''இல்லை, அப்படிச் செய்யக் கூடாது. பெண்ணே! மனதை அடக்க வேண்டும். இயற்கையுடன் போட்டியிடாதே. இனி இவ்வாறு செய்ய வேண்டாம். காலத்தின் பலமான சக்தியின் மீது சரகருடைய திறமையும்கூடப் பலிக்காது. அதற்கு அவனும் அடிமைதான்!'' என்று கூறித் தமது வெண்மையான தாடியை உருவி விட்டுக்கொண்டார். அவர் கையில் இருந்த திவ்யரசத்தைப் பருக அவசரப்பட்டாள் சசிகலை.

''சபதம் செய்! சரகருடைய மருந்துச் சாலைக்கு இனி வருவதில்லை என்று சபதம் செய்!'' என்று கர்ஜித்தார் சரகர்.

''இல்லை, சுவாமி! இனிமேல் சத்தியமாக இங்கே வரமாட்டேன்!'' தன் வசமின்றியே அவள் வாய் பதில் கூறியது.

காமுகனுடைய தற்காலத் திருப்தியைப் போல, கட்டிளம் காரிகையாக மாறிச் சிற்றின்ப வெள்ளத்தில் மிதக்க வேண்டும் என்ற பேராசை பிடித்த அந்தப் பெண்ணின் ஆசை நிறைவேறுவது மிகவும் சமீபத்திலேயே இருந்தது. அதை அடையும் ஆசையில் அவள் உறுதிமொழி அளித்து விட்டாள்.

அந்த அதிசய மருந்துத் துளிகளை அவள் சுவைத்தாள். பிறகு படுத்துக்கொண்டாள். மறு விநாடி நினைவை இழந்தாள். மூர்ச்சையடைந்த நிலையில் கிடந்த சசிகலையை வெறுப்புடன் உற்றுப் பார்த்துக்



கொண்டிருந்தார் சரகர். வேலைக்காரன் மெல்லிய துணியினுல் அவள் முகத்தை மூடி, அதன் மீது குளிர்ந்த நீரைத் தெளித்துக்கொண்டிருந்தான். வைத்தியர் என்ற முறையில் சரகர் அவளுடைய நாடியைப் பரிசோதனை செய்தபடியே நின்ருர். சில விநாடிகளுக்குப் பிறகு மெல்ல மெல்லக் கண்ணைத் திறந்து சுற்றிலும் கவனித்தாள் சசிகலை. அவள் உடலிலே ஒரு பரபரப்பு. அவளுக்கு உடனே எழுந்து ஓட வேண்டும் போல இருந்தது. சட்டென்று எழுந்து எதிரிலே இருந்த கண்ணுடியில் தன் உருவத்தைக் கவனித்துப் பார்த்தாள். அதிசயமும் ஆனந்தமும் பொங்கத் துள்ளி எழுந்து நின்ருள்.

இருபது ஆண்டுகளுக்கு முன்னுல் தன் மேனிப் பளபளப்பு எப்படி இருந்ததோ, அப்படியே இப்போதும் இருப்

பதைக் கண்டு மனம் பூரித்தாள். பத்து ஆண்டுகளுக்கு முன்பு தன் கட்டழகு பொலிவை இழந்தபோது எந்தத் திவ்ய ரசத்தைப் பருகி மறுபடியும் புதிய யௌவனத்தை அடைந்தாளோ, அதே திவ்ய ரசத்தினுல் இப்போது புத்தம் புதிய கட்டழகைப் பெற்று மகிழ்ச்சியினுல் துள்ளினுள். உணர்ச்சியின் வேகத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் கலகலவென்று நகைத்தாள். அவள் கண்களில் பேராசையும் வெறியும் காணப்பட்டன.

''மகரிஷி! இந்த அதிசய மருந்தை, அற்புத ரசத்தை என்னிடம் கொடுத்து விடுங்கள். அதற்குப் பதிலாக வாழ்க்கையின் பிரேமரஸத்தை உங்களுக்குத் தருகிறேன்'' என்று கொஞ்சியபடி கூறினுள்.

''போதும், நிறுத்து! இனி நீ இங்கே காலடி வைக்கக்கூடாது. உனக்கு மீண்டும் இது போன்ற மாறுதல் வேண்டுமானுல் அசுவகோஷர் அல்லது நாகார்ஜுன பிக்ஷு இவர்களிடம் செல். உன் சபதம் நினைவில் இருக்கட்டும்!'' என்று கண்டிப்புடன் கூறினுர் சரகர்.

சசிகலை அவரைப் பார்த்து அலட்சியமாகச் சிரித்தாள். பிறகு மான்குட்டி போலத் துள்ளி ஓடி ராஜபாதையை அடைந்தாள்.



மகரிஷியின் உள்ளம் வேதனையால் தவித்தது. அவர் மனதிலே பெரியபோராட்டம்: 'நான் இந்த மருந்தை எதற்காகக் கண்டு பிடித்தேன்? இந்தச் சிரஞ்சிவிமருந்தின் பயன் கேவலம் சுகபோக வாழ்க்கைக்காகத்தானு! முற்றும் துறந்த மகான்கள் பிணி மூப்புக்களின் பிடியில் சிக்கிக் கொள்ளாமல் இருந்து உலக மக்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்று நினைத்தல்லவா இதைத் தயாரித்தேன்? இப்போது நடப்பதென்ன? சீ! இது கேவலம். இதற்காகவா இதை உபயோகப்படுவது! நான் மதியை இழந்துவிட்டேனு? ஏன் இதை இவளுக்குக் கொடுத்தேன்? என் புத்தி மயங்கிவிட்டதா?' என்றெல்லாம் சிந்தனை ஓடியது.

> இறைவனை நேரில் காண்பது போல் அவனை வணங்கு. ஏனென்ருல், நீ அவனைக் காணுவிட்டாலும் அவன் உன்னைப் பார்த்துக்கொண்டிருக்கிருன்.
>
> —நபிகள் நாயகம்

கையில் இருந்த அந்த இரத்தவண்ணத் திரவத்தை உற்றுப் பார்த்தபடியே நின்ருர். திடீரென்று அதை எதிரே இருந்த தன்வந்தரியின் சிலைமீது வேகமாக வீசி எறிந்தார். அந்த மருந்துச் சீசா தூளாகி நாற்புறமும் சிதறியது. இரத்த நிறமுள்ள திராவகம் சிலையின் மீது வழிந்தோடியது. அப்போது அந்த வடிவம் பார்ப்பதற்கு மிகப் பயங்கரமாகக் காட்சியளித்தது.

சரகருடைய கண்ணில் நெருப்பு ஜ்வாலையே வீசுவது போலிருந்தது. அவர் மனம் கொந்தளித்தது. அங்கேயுள்ள பொருள்களையெல்லாம் எடுத்து நாற்புறமும் வீசியெறிந்தார். எல்லாம் சிதறி உடைந்து சின்னபின்னமாகிவிட்டன. சில மருந்துகளை எடுத்து மூலைக்கு ஒன்ருக வைத்தார். உடனே அவசரமாக வெளியே ஓடி வந்தார். பயத்தினுல் நடுங்கிக்கொண்டிருந்த வேலைக்காரனும் அவரைத் தொடர்ந்தான்.

திடீரென்று அண்டமே அதிரும்படியான பயங்கர வெடிச் சத்தம். மறு விநாடி சரகருடைய மருந்துச் சாலையின் நாற்புறத்திலும் அக்கினி ஜ்வாலை பரவிக் கொழுந்து விட்டெரியத் தொடங்கியது. பல வருஷங்களாகப் பாடுபட்டுக் கண்டு பிடித்த மருந்துகளும், அல்லும் பகலும் இடைவிடாமல் உழைத்துத் தயார் செய்த அதிசய ஔஷதங்களும், தீராத நோய்களைத் தீர்க்கும் அமுதம் போன்ற

திராவகங்களும், உலகப் பிரசித்தி பெற்ற மகரிஷி சரகருடைய வைத்திய சாலையும்—எல்லாமே ஒரே நொடியில் அழிந்துவிட்டன.

ஆகாயத்தைத் தொடுவதற்காக மிகவும் அவசரமாகச் சென்ற அக்கினி ஜ்வாலையைக் கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டு நின்ருர் அந்த அதிசய மருத்துவர். அவருடைய முகத்தில் மகிழ்ச்சி நிரம்பிய புன்னகையும், எல்லையற்ற சாந்தியும் நிலவின.

காலச் சக்கரம் சுழன்று, பத்து வருஷங்கள் மறைந்துவிட்டன. இயற்கையையொட்டி, சசிகலையின் யௌவனம் தேய்ந்து மீண்டும் பழையபடி அழகு மங்க ஆரம்பித்தது. அவளுடைய பூரிப்பும் துள்ளலும் ஆணவமும் அட்டகாசமும் குறையத் தொடங்கின. ஆனல் சிற்றின்பம் அனுபவிக்கும் பேராசை மட்டும் அவளை விடவேயில்லை. விஷயதாகம் அவளை வாட்டியது. மறுபடி ஒரு முறை இழந்த இளமையைப் பெற விரும்பினுள். ஆனல் சரகருடைய அதிசய மருந்து இனிக் கிடைக்காதே! சசிகலை சிந்தனையில் மூழ்கினுள்; 'இனி நமக்கு அசுவகோஷரும் நாகார்ஜுனபிக்ஷுவுமே கதி' என்று மெல்ல முனகினுள்.

ஒரு நாள், அசுவகோஷரைத் தேடிச் சென்ருள். மகாகவியாகிய அவர் அப்போதுதான் புத்தசரிதத்தையும் சௌந்தரனந்தம் என்ற காவியத்தையும் இயற்றி முடித்திருந்தார். அவர் அந்த இரண்டு மகாகாவியங்களையும் கொண்டு வந்து படிக்க ஆரம்பித்தார். வேதாந்த ரகசியங்களை மிகவும் அழகாக, விரிவாக அவளுக்கு எடுத்துச் சொல்லத் துவங்கினுர்.

சசிகலை பொங்கி வந்த சிரிப்பைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள். காவியத்தில் வர்ணிக்கப்பட்டுள்ள சிருங்கார ரஸம் அவளுடைய காம வாசனையைத் தூண்டியது. யசோதரையின் காதல், மாரனுடைய சேனைகளின் வர்ணனை, நந்தனுடைய விளையாட்டு முதலியவை அழகாக இருப்பது போலத் தோன்றியது அவளுக்கு. அவள்

> நற்செயல்களைச் சேகரம் செய்க. அவையே விமோசனம் அளிக்கும். உலகில் தோன்றுவன அனைத்தும் அழியும். அழியாமல் நிற்பன ஒழுக்கமும் பிறருக்கு உதவுவதுமே ஆகும்.
>
> —ஜாரதுஷ்டிர மதம்

எங்கேயோ கவனமாக இருந்ததைக் கண்டதும் அசுவகோஷருக்குக் கோபம் வந்தது.

"சுவாமி! மன்னிக்க வேண்டும். என் நோய்க்கு மருந்து தங்களிடம் இல்லை. உங்களுடைய தத்துவங்களை உங்களால் தான் அறிந்துகொள்ள முடியும். உயிருள்ள மனித சமூகத்தின் கவலைகளையும் ஆசைகளையும்தான் என்னுல் அறிய முடியும். அவர்களுடைய ஆனந்தத்திற்காக, திருப்திக்காக என் உடலில் சக்தி வேண்டும். என் உடலில் இளமையும் கட்டழகும் துள்ளித் ததும்ப வேண்டும். அதை உங்களால் கொடுக்க முடியுமா?" என்ற சசிகலையின் சொற்களுடன் கூடவே அசுவகோஷர் அங்கிருந்தே மறைந்து விட்டார்.

சசிகலை தனியே விடப்பட்டாள்.

நாகார்ஜுனபிக்ஷுவும் உபகுப்தரைப் போல ஏழை மக்களுக்கே சொந்தமாக இருந்தார். உபகுப்தருடைய ஆத்மாவே நாகார்ஜுனபிக்ஷுவாக உருக் கொண்டுள்ளதோ என்று தோன்றியது. பலவீனமான ஜீவனுக்கு ஆதரவளித்து உதவுவதையே தமது முக்கியத் தர்மமாகக் கொண்டு வாழ்ந்து வந்தார் நாகார்ஜுனர்.

அதிகாலை நேரம். பறவைகள் இனிய குரலில் ஆனந்தமாகப் பாடிக்கொண்டிருந்தன. நாகார்ஜுனரின் பௌத்த விஹாரத்தில் அமைதியும் ஆனந்தமும் பரிபூரணமாக ஆட்சி செலுத்தின. பிக்ஷு பூஜைக்கு ஆயத்தம் செய்வதில் ஈடுபட்டிருந்தார். அவரது முகத்தில் தெய்விக ஒளி நிறைந்திருந்தது.

நீ செய்யும் பாவமே உன்னைக் காட்டிக் கொடுத்துவிடும்.

—இயேசுகிறிஸ்து

''பிக்ஷுவர்ய! தங்கள் புகழ் உலகம் முழுவதும் பரவியிருக்கிறது. இந்தப் பேதைக்கும் உதவி செய்ய வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்'' என்று கூறிய படியே பிக்ஷுவின் திருவடியில் தலை வைத்து வணங்கினுள் சசிகலை.

''ஆகட்டும் அம்மா, பரோபகாரம் தானே மனித தர்மம்'' என்ருர் பிக்ஷு.

''சுவாமி! சரகர் தெய்விகசக்தி வாய்ந்தவர். அவர் இரண்டு முறை எனக்கு அதிசயமான சக்தியையும், மங்கிப் போன அழகையும் திரும்பக் கொடுத்தார். அதனுல் இந்த உலகத்து விட புருஷர்களெல்லாம் தம் வசமிழந்து என் காலடியிலேயே விழுந்து கிடந்தார்கள். ஆனுல் இப்போது மறுபடி என் உடலில் தளர்ச்சி வந்துவிட்டது. அழகும் குன்றி விட்டது. இதற்கு ஏதாவதொரு......''

பிக்ஷுவின் புருவங்கள் நெளிந்தன. அவர் அங்கிருந்து புறப்பட்டுவிட்டார்.

''சுவாமி! மகான் சரகருடைய வைத்தியசாலை தீக்கிரையாகிவிட்டது. ஆனுல் அவருடைய சொற்கள் இன்றும் என் செவியில் ஒலிக்கின்றன. அவருடைய வார்த்தையின்படியே இங்கு வந்தேன்.''

''அம்மணி! தெய்வசக்தி வாய்ந்த அந்த மருத்துவர் என்ன சொன்னுர்?'' என்று இப்போது நிதானமாகக் கேட்டார் நாகார்ஜுனர்.

'' 'பெண்ணே! இனிச் சரகருடைய வைத்தியசாலையில் காலடி வைக்காதே! மறுபடி நீ மாறுதல் பெற விரும்பினுல் அசுவகோஷர் அல்லது நாகார்ஜுன பிக்ஷு இவர்களிடம் செல்' என்ருர், சுவாமி! எனது ஆசை இங்கே பூர்த்தியாகுமா?''

பிக்ஷு மெல்லச் சிரித்தார். ''ஒகோ! சரிதான். புரிந்துகொண்டேன். அம்மணி! நீங்கள் மகாகவி அசுவகோஷரைச் சந்திக்கவில்லையா?''

''கண்டேன், சுவாமி! ஆனுல் கவியின் உடல் மட்டுமே நவரசத்தின் அழகுடன் பிரகாசிக்கிறது. உள்ளே கடினமான வேதாந்த இதயம்தான் இருக்கிறது. என்னைப் போன்றவர்களுக்கு அங்கே இடமில்லை. அவர் உள்ளும் புறமும் ஒன்றுபடாதவர்'' என்று கூறி உரக்கச் சிரித்தாள். கர்வமும் அலட்சியமும் காமமும் நிறைந்த அந்தச் சிரிப்பொலியைக் கேட்ட பிக்ஷு மனதிற்குள்ளாகவே சிரித்தார்.

பிறகு, ''சசிகலா! கவலைப்படாதே. நீ இழந்துவிட்ட செல்வத்தை, ஆனந்தத்தை நான் மீண்டும் தருகிறேன். எல்லையற்ற ஆனந்தத்தின் கடைசிப் பகுதி என்னிடம் இருக்கிறது. புறப்படு, என்னுடன் வா'' என்று கூறி, முன்னுல் நடக்க ஆரம்பித்தார்.

சசிகலையின் ஆனந்தம் எல்லை மீறியது. துள்ளியபடியே கம்பீரமாக அவரைத் தொடர்ந்து சென்ருள். சுற்றியுள்ள பௌத்த பிக்ஷுக்கள் அவளைக் கண் இமைக்காமல் பார்த்தார்கள். தங்கள் தலைவருடைய மந்திர சக்தி வாய்ந்த சொற்களைக் கேட்டுப் பிரமித்து நின்றனர்.

வைத்தியநிபுணர் சரகரும், மகாகவி அசுவகோஷரும் கொடுக்க முடியாத பொருளை, ஆனந்தத்தைத் தருவதாகக் கூறும் தங்கள் குருவின் சொற்களைக் கேட்டுப் பிக்ஷுக்கள் அதிசயத்தில் ஆழ்ந்தனர்.

புத்த சைத்யத்தின் (தியான மண்டபத்தின்) தலைவாசல் மலர்த் தோரணங்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தது. வாசற்புறத்தின் இரண்டு பக்கங்களிலும் சங்கம் பத்மம் இவற்றின் சித்திரம் தீட்டப்பெற்றிருந்தது. பூஜை மண்டபத்திலிருந்து வந்த தூபத்தின் நறுமணம் நாற்புறமும் பரவியிருந்தது. எதிரே உயரமான மேடைமீது புத்தபிரானுடைய கம்பீரமான உருவம் அபயமுத்திரையுடன் காட்சியளித்தது. அற்புதமான சாந்தமும், இனிமையான புன்சிரிப்பும்

கொடுப்போர் நினைவில் வைத்துக் கொள்ளலாகாது. பெறுவோர் மறந்துவிடலாகாது.

—எபிரேய மதம்

நிறைந்த அந்தக் கருணாமூர்த்தியின் தோற்றம், தரிசனம் செய்பவர்களின் இதயத்திலே ஒருவித அமைதி நிறைந்த ஆனந்தத்தையும் தைரியத்தையும் நிரப்பியது.

நாகார்ஜுனர் கம்பீரமாக முன்செல்ல, புருஷபுரத்தின் பிரசித்தி பெற்ற பேரழகி சசிகலை அவரைத் தொடர்ந்து சென்றாள்.

நாகார்ஜுனர் போதிசத்துவருடைய சந்நிதியில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். பிறகு வீணையை எடுத்து மடிமீது வைத்துக்கொண்டு மெதுவாக மீட்டினார். சிறிது நேரத்தில் அந்தத் தந்தி வாத்தியத்தின் இனிய நாதம் எங்கும் எதிரொலித்தது. மெல்ல மெல்ல அவரது விரல்களின் சஞ்சாரம் வேகமாகியது. அந்த மதுரமான கானம் சசிகலையின் தளர்ச்சியடைந்த உடலில் புதிய சக்தியைத் தோற்றுவித்தது.

அவள் ஆடாமல் அசையாமல் சிலையைப் போல அமர்ந்திருந்தாள். நாகார்ஜுனபிக்ஷுவின் உணர்ச்சிமயமான சங்கீதம், வீணையின் ஜங்காரத்வனி, புத்த சரிதத்தின் பாடல்களின் வரிகள், தன்மய நிலையில் பாடிய பிக்ஷுவின் கம்பீரக் குரல்—இவை யாவும் கேட்பவர்களின் இதயத்தைத் தொட்டு உலுக்கின. சசிகலை பிரமித்தாள். போதிசத்துவரையும் பிக்ஷுவையும் மாறி மாறிப் பார்த்தாள். அவள் மனம் உணர்ச்சி வேகத்தினால் துள்ளியது. பொழுது ஓடிக் கொண்டிருந்தது. பிக்ஷு தம்மை மறந்து பாடிக்கொண்டிருந்தார். சசிகலை அவருடன் கூடவே, அதே பாடலை மெல்லிய குரலில் பாட ஆரம்பித்தாள். இந்த வசீகரம் எப்படி ஏற்பட்டது? இதற்குக் காரணம் சாந்தமூர்த்தியான புத்த பகவானா அல்லது மகான் நாகார்ஜுனரின் அசாதாரணமான சங்கீதத்தின் தெய்வ நாதமா? சசிகலை இணையற்ற ஆனந்தானுபவத்தில் திளைத்தாள்.

நாட்கள் சென்றன. மாதங்களும் வருஷங்களும் ஓடின. சசிகலை தினந்தோறும் புத்த விஹாரத்திற்கு வருவதும் நாகார்ஜுனருடன் வீணை வாசிப்பதும் இனிமையான குரலில் உருக்கமாகப் பாடுவதும் தவறாமல் நடந்துகொண்டிருந்தன. நாளடைவில் பிக்ஷு தியான மண்டபத்திற்கு வருவதை நிறுத்திவிட்டார். இப்போது சசிகலை மட்டுமே அங்கே தினமும் வருகிறாள். சங்கீதத்தின் தெய்விக ரசத்தைப் பருகுகிறாள். அளவற்ற உற்சாகத்துடன் இனிய குரலில் பாடுகிறாள்.



ஒரு நாள் விடியற்காலை வேளை. அமைதிமயமான புத்த விஹாரத்திலிருந்து அற்புதமான தெய்வகானம் ஒலித்தது. வீணையின் கம்பீர நாதமும் சசிகலையின் இனிமையான குரலும் இணைந்து சுற்றுப்புறமெங்கும் ஆனந்தத்தை நிரப்பின. கண்களை மூடித் தியான நிலையிலே ஆழ்ந்து தன்மயமாகப் பாடிக்கொண்டிருந்தாள் சசிகலை.

''தாயே!'' என்ற அன்பான குரலைக் கேட்டு அவள் திடுக்கிட்டு எழுந்தாள். எதிரே நாகார்ஜுனர் நிற்பதைக் கண்டதும் அவரைப் பணிவுடன் வணங்கினாள்.

''அம்மணி! சரகரையும் மகாகவியையும் விட்டு எந்தப் பொருளை நாடி இங்கே வந்தீர்களோ அது உங்களுக்கு வேண்டாமா? காலம் ஓடிக்கொண்டிருக்கிறதே!'' என்றார் பிக்ஷு.

சசிகலே மெல்ல நகைத்தாள். அந்தப் புன்சிரிப்பில் அடக்கமும் பரிபூர்ண திருப்தியும் நிறைந்திருந்தன. அவள் மிகவும் அமைதியுடன் பணிவாகக் கூறினாள்.

"பிக்ஷுவர்ய! வேண்டாம். அந்த அழியக்கூடிய அநித்திய வஸ்து எனக்கு வேண்டாம். இப்போது எனக்கு என்றுமே அழியாத அற்புதச் செல்வம் கிடைத்துவிட்டது. இந்த உலகத்திலுள்ள சகலவித சுகபோகங்களையும் நான் அனுபவித்துவிட்டேன். ஆனால், இந்தத் தெய்வபக்தி என்ற இணையற்ற ஆனந்தத்திற்கு, சுகத்திற்கு வேறு எதுவுமே ஈடாகாது என்பதைத் தெரிந்துகொண்டுவிட்டேன். இந்த அழியாத அழகையும் இளமையையும் அளிக்க வல்ல மருந்து, என் உள்ளத்தின் பலவீனத்தைப் போக்கிவிட்டது. இப்போது நான் வெளிச்சத்தில் இருக்கிறேன். அந்த ஒளிமயமான பிரகாசத்தில் என்னைச் சுற்றிலும் இருக்கும் எல்லாப் பொருள்களும் அழகுடன் விளங்குவதைப் பார்க்கிறேன். இந்த அதிசயமான அமுத சஞ்சீவி மருந்து என் உடலில் நிரந்தரமான, குன்றாத இளமையை நிரப்பிவிட்டது" என்று சாந்தமாகக் கூறி, மீண்டும் பிக்ஷுவின் திருவடியில் தலைவைத்து வணங்கினாள்.

மகான் நாகார்ஜுனபிக்ஷு கருணையுடன் தம் கைகளை உயர்த்தி அவளுக்கு ஆசி வழங்கினார். ★

## எழுத்தாளர்களுக்கு

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள், மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், பொன்மொழிகள், ஆன்மிக வினா (கவிதைகள் அனுப்ப வேண்டாம்) முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

**மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும், கருத்தாழம் கொண்டதாகவும் எழுத்தோவியம் அமைவது முற்றிலும் அவசியம்.** காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம்விட்டு, எளிய தமிழ் நடையில் தெளிவாக எழுத வேண்டும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால், அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற்குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும். அவ்விதம் பதில் பெறாத அன்பர்கள் போதிய தபால் தலைகளை அனுப்பி வைத்துத் தமது படைப்புக்களைத் திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டுகிறோம்.

ஆசிரியர்,
ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்.

## வாசகர் கவனத்திற்கு

ஃ ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகைக்கு ஏஜெண்டுகள் தேவை. முன்பணம் கட்டக்கூடிய பத்திரிகை விற்பனையாளர்கள் ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயத்துடன் தொடர்பு கொள்ளலாம்.

ஃ ஆயுள் சந்தாதாரர்கள், தாங்கள் செலுத்தியுள்ள ரூ. 12 போக மீதி ரூ. 138-யைச் செலுத்தி ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ளலாம். தொகையை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ ஒரு வருடத்தில் செலுத்தலாம். ஆயுள் சந்தாதாரராகச் சேருவது பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி செய்வதாகும்.




சுவாமி கமலாத்மானந்தர்

**கேள்வி : மாக்கல் கணேச விக்கிரகம் வைத்து வழிபாடு செய்யலாமா?**

**பதில் :** செய்யலாம். அவ்விதம் முதல் முதலாகப் பூஜை செய்யும்போது, 'பிராணப் பிரதிஷ்டை' செய்துவிட்டு வழிபாடு தொடங்குவதே முறையாகும்.

**கேள்வி : நமது உள்ளத்தில் சில சிந்தனைகள் (தீர்மானங்கள்) தோன்றுகின்றன. இவை கடவுள் சங்கற்பத்திற்கு உட்பட்டவை என்றும் உட்படாதவை என்றும் எவ்விதம் தெரிந்து கொள்வது?**

**பதில் :** நம்முடைய சங்கற்பங்கள் தெய்வ சங்கற்பத்திற்கு விரோதமில்லாதிருந்தால்தான் பூர்த்தியாகும். இல்லையேல், ஆரம்பத்தில் வெற்றி தோன்றினாலும் பிறகு வேருடன் அழியும். இதை முன்கூட்டியே நாம் அறிவது மிகவும் கடினம். அதற்காகத்தான் சாஸ்திரம். சாஸ்திரம் என்பது ஞானிகளுடைய அனுபவம் அடங்கியது.

நம்முடைய சங்கற்பம் சாஸ்திரத்திற்கு விரோதமில்லாதிருக்கிறதா என்று பெரியோர்களிடம், சாஸ்திரமறிந்தவர்களிடம் கேட்டுத்தான் தெரிந்து கொள்ள வேண்டும். 'சாஸ்திரம்தான் பிரமாணம்' என்று பகவத்கீதையில் பதினாறுவது அத்தியாய முடிவிலே பகவான் கூறுகிறார்.

பெரியோர்களும் சாஸ்திரங்களும் கிடைக்காவிட்டால் மனச் சாட்சியைக் கூர்ந்து கேட்டால் வழி சொல்லும்.

1. நமது உள்ளத்தில் தோன்றும் தீர்மானம் சுயநலம் இல்லாமலிருக்கிறதா?

2. ஆன்மிக வளர்ச்சிக்கு உதவக்கூடியதா, இடையூறு செய்யக் கூடியதா?

3. தியாகமும் புனித உணர்வும் இருக்கின்றனவா?

4. சாஸ்திரங்களும் மகான்களும் கூறிய உபதேசங்களுக்கு அந்தத் தீர்மானம் இயைந்து உள்ளதா?

5. தாற்காலிகமாக இல்லாமல் நிலையான நன்மை தரக் கூடியதா?

இவை போன்ற கேள்விகளை மனதிற்குள் கேட்டு அதற்குக் கிடைக்கும் பதில்களின் அடிப்படையில் நமது தீர்மானங்கள் அல்லது சிந்தனைகள் கடவுள் சங்கற்பத்திற்கு உட்பட்டவை என்றும் உட்படாதவை என்றும் ஒருவாறு தெரிந்து கொள்ளலாம்.

**கேள்வி: "தயாமூல தன்ம வழி எனக்கு நல்கி, மனம் திருந்தும் மழபாடி வயிரத்தூணே" என்று அப்பர் சுவாமிகள் பாடியுள்ளாரே, 'தயாமூல தன்மவழி' என்று அவர் எதைக் குறிப்பிடுகிறார்?**

**பதில் :** 'தயாமூல தன்மம்' என்பது அப்பரால் சொல்லப்பட்ட புதிய சொற்றொடர். இதன் பொருள் அன்பும், அன்பிற்கு அடிப்படையான அறமும் என்பதாகும். அன்பும் அறமும் இணைந்த பண்பினை அப்பர் இந்தச் சொற்றொடரால் விளக்குகிறார்.

வாழ்க்கையின் முதல் பகுதியில் வெற்றி பெறத் தேவை என்ன தெரியுமா? சுறுசுறுப்பும் ஊக்கமும்தான். இறுதியில் வெற்றி பெறப் பொறுமையும் தன்னடக்கமும் தேவை.

—அரிஸ்டாடில்

**கேள்வி: நாமஜபத்தைக் குறித்து விஜயத்தில் வெளிவந்த கட்டுரையில் 'ஓங்கார ஜபம் சந்நியாசிகளுக்கு மட்டும் உரியது' என்று இருக்கிறது. தனி ஓங்கார ஜபத்தை இல்லறத்தவர் செய்யக்கூடாதா?**

**பதில்:** தனி ஓங்கார ஜபம் என்பது நிர்க்குண உபாசனையாகும். ஓங்காரத்தைச் சகுணத்துடன் சேர்த்து, 'ஓம் ராமாய நம:, ஓம் சிவாய நம:' என்று கூட்டிச் சொல்வதுதான் இல்லறத்தாருக்குச் சிறப்பு. தனி ஓங்கார ஜபம் பற்றற்ற நிலை எய்தியவர்களுக்குத்தான் என்பது பெரியவர் கருத்து.

''அருவக் கடவுளைக் குறித்துச் சாதனை செய்வது மிகவும் கடினம். பெண், பொன் ஆசைகள் அடியோடு மறையாவிட்டால் இந்தச் சாதனையைச் செய்து வெற்றி பெற முடியாது. இந்தச் சாதனைக்கு வெளித்துறவு, உள்துறவு ஆகிய இரண்டும் வேண்டும். பொருளாசை சிறிது இருந்தாலும்கூட இந்தச் சாதனத்தில் வெற்றி பெற முடியாது'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு சமயம் குறிப்பிட்டார். இதே ரீதியில்தான் பல சாஸ்திரங்களும் கூறுகின்றன; பல மகான்களும் கூறியுள்ளனர். அவர்கள் தெரிவித்துள்ள நிபந்தனைகளை நிறைவேற்ற வல்ல எவரும் தனி ஓங்கார ஜபத்தை மேற்கொள்ளலாம்.

தனி ஓங்கார ஜபம் என்பது நல்ல ஒரு விதை போன்றது. பற்றற்ற மனம் என்ற நல்ல பூமியில் மட்டும் அது நல்ல விளைச்சலைத் தருகிறது.

**கேள்வி: நிர்க்குணப் பிரம்மத்தை வழிபடுவது உண்மையில் சாத்தியமானதுதானு? நிர்க்குணப் பிரம்மத்தை உபாசிக்க விரும்பும் சாதாரண மனிதனுக்குத் தாங்கள் கூறும் அறிவுரை யாது?**

**பதில்:** முந்திய கேள்விக்குத் தந்த பதில் இதற்கும் பொருந்தும்.

கீதை 12-ஆவது அத்தியாயத்தின் ஆரம்பத்தில் இந்தக் கேள்வி கேட்கப்படுகிறது. பகவான் கூறுகிறார்: ''அவ்வியக்தப் பொருளில் (நிர்க்குணப் பிரமத்தில்) நாட்டம் கொண்ட அவர்களுக்குச் சிரமம் அதிகம். உடற்பற்று உள்ளவருக்கு அவ்வியக்த நெறி (நிர்க்குண உபாசனை) மிகவும் கஷ்டமானது.''

எனவே உடல் உணர்ச்சி எனப்படும் தேகாபிமானம் உள்ள வரையிலும் நிர்க்குண உபாசனை மிக மிகக் கஷ்டமாகும். சாதாரண மனிதனுக்கு, சகுண உபாசனை எனப்படும் உருவ வழிபாடுதான் சிறந்தது என்று பகவான் அர்ஜுனனிடம் கூறுகிறுர். சகுண உபாசனையைச் செய்ய வேண்டிய முறையில் தவருமல் தொடர்ந்து பின்பற்றினுல் முடிவில் அது நிர்க்குண உபாசனைக்கு அழைத்துச் செல்லும்.

நடக்கவே முடியாதவனுக்கு விரைந்தோடுவது என்பது சாத்தியமல்ல. அதுபோல் சகுண உபாசனையிலேயே நிலைபெருதவன் நிர்க்குண உபாசனையில் நிலைபெறுவது சாத்தியமல்ல.

நிர்க்குணப் பிரம்மம், சகுணப் பிரம்மம் ஆகியவை ஒரே காகிதத்தின் இரண்டு பக்கங்கள் போன்றவை. சகுணப் பிரம்ம உபாசனையில் சிறப்பாக ஒருவன் நிலைபெற்று விடுகிருன் என்று வைத்துக்கொள்வோம். அவன் மீது பேரன்பு கொள்ளும் தெய்வம் தனது மறு பகுதியாக விளங்கும் நிர்க்குண வடிவத்தை அந்தப் பக்தனுக்குக் காட்டி அருள்கிறது,

நிர்க்குணப் பிரம்மம் பற்றிய வெற்று நூலறிவை ஏராளமாகப் பெற்றிருப்பதை விட, சகுணப் பிரம்மம் பற்றிய அனுபவங்களைச் சிறிதளவு சுயமாகப் பெற்றிருந்தாலும் அதுவே பாராட்டுதலுக்கு உரியது.

**கேள்வி : ஸ்போடவாதம் என்ருல் என்ன?**

**பதில்:** 'ஒரே மூல சப்தத்திலிருந்து எல்லாம் வெளிவந்தது — ஓங்காரத்திலிருந்துதான் அனைத்தும் தோன்றியது' என்ற வாதம் ஸ்போடவாதம் எனப் பெறுகிறது. பிந்துவிலிருந்து கலை, கலையிலிருந்து நாதம்—'நாதபிந்து கலாதி' என்று பரம்பொருளை ஸ்போடவாதம் கூறுகிறது. ★





# விவேக மொழிகள்



**ஸ்ரீ சாரதாதேவியார் அருளியது**

1. ஒருவருக்குத் தேவையானதெல்லாம் இறைவனது அருளே. ஒருவர் அதற்காகவே பிரார்த்தனை செய்ய வேண்டும்.

2. கீழ்நோக்கி ஓடுவதே தண்ணீரின் இயற்கை. ஆனல் கதிரவனின் கிரணம் அதனை ஆவியாக்கி வானில் உயர்த்துகிறது. அது போலவே, மனமும் இழிந்த பொருள்களான விஷயசுகங்களை நாடிப் போவது இயற்கை. ஆனல் கடவுளின் திருவருள் மனதை உயர்ந்த பொருளை நாடிச் செல்லும்படி தூக்கி விடும்.

3. உண்மையைக் கடைப்பிடிப்பதனுல் ஒருவர் கடவுளை அடைவார்.

4. வாழ்க்கைப் பிரச்னைகளைத் தீர்க்கச் சுலபமானதும் மேலானதுமான மார்க்கம் ஆண்டவனின் நாமத்தை, ஸ்ரீராமகிருஷ்ணரின் பெயரை, மௌனமாக ஜபிப்பதாகும்.

5. ஸ்ரீராமகிருஷ்ணரிடம் நம்பிக்கை வை. அவர் உன் துன்பங்களை நீக்கி மன அமைதி அளிப்பார்.

6. குருதேவர் உன்னைக் காப்பவராக இருப்பார். நீ அவரை நம்பி வாழ வேண்டும். அவர் விரும்பினல் உனக்கு நன்மை செய்யட்டும்; இல்லையேல், உன்னை மூழ்கச் செய்யினும் செய்யட்டும். ஆனல் நீ எப்போதும் உன் சக்திக்கு உட்பட்டு, எப்போதும் நேர்மையானதையே செய்தல் வேண்டும்.

7. நீ ஏன் பயப்பட வேண்டும்? குருதேவரைச் சரணடை; அவர் எப்போதும் உன் அருகில் இருக்கிருர் என்பதை நினைவில் கொள்.

8. கடவுளின் காட்சியை ஒருவர் இறைவனின் திருவருளால்தான் பெற முடியும். ஆயினும் தியானமும் ஜபமும் ஒருவர் பழக வேண்டும். அது மனதின் மலங்களை அகற்றும். பூஜை முதலான ஆன்மிகக் கட்டுப்பாடுகளும் தேவையே. பூவைக் கையில் எடுத்தால் வாசனையை அறிவது போலவும், கல்லின் மீது சந்தனக்கட்டையைத் தேய்த்தால் மணத்தை மோப்பது போலவும், கடவுளைப்பற்றி எப்போதும் நினைப்பதனுல் ஆன்மிக விழிப்பு ஏற்படும்.

9. மகாமாயை வழி திறக்காவிட்டால் விடுதலை எப்படிக் கிடைக்கும்? மனிதனே! கடவுளை அடைக்கலமாக அடை. அவனிடம்சரண்புகு. அப்போதே மகாமாயை கருணை கொண்டு விடுதலை வழியைத் திறப்பாள்.

10. குருவினிடமும் இஷ்டதெய்வத்தினிடமும் நம்பிக்கை வை.

11. நீ உண்மையாகத் தியானம் பழகு. அப்போது ஆண்டவனின் அளவற்ற கருணையின் இருப்பை உணர்ந்துகொள்வாய்.

12. ஒரு தரமாவது உண்மையாகக் கடவுளிடம் பிரார்த்தனை செய்தவன் எதற்கும் பயப்பட வேண்டியதில்லை. இடைவிடாது ஆண்டவனைப் பிரார்த்திப்பவன் அவனது அருளால் பிரேம பக்தியை அடைகிருன்.

13. ''உலகத்தில் துன்பம் நிறைந்திருக்கிறது. நாங்கள் ஆண்டவனை வணங்கினேம். ஆயினும் துன்பத்திற்கு முடிவு மில்லை'' என்று வருந்திப் பலர் கூறுகின்றனர். ஆனல் துன்பமும் கடவுள் தந்த பரிசே. அந்தத் துன்பம் கடவுளின் கருணையைக் குறிக்கும் சின்னமாகும். ★



# துளசிதாசரின் உள்ளம்



தமிழில்: எஸ். பி. ராஜகுமாரி

பிரபுவே! எல்லாக் குற்றங்களும் என்னுடையனவே. நீ நல்லொழுக்கக் கடல், தயை நிறைந்தவன், அநாதைகளின் தலைவன், ஏழைகளையும் துன்புற்றவர்களையும் காப்பாற்றுபவன்.

என் வேஷத்திலும் சொற்களிலும் வைராக்கியம் இருக்கிறதே தவிர, என் மனமோ பாவங்களும் தீய குணங்களும் நிறைந்த பொக்கிஷமாகவே இருக்கிறது.

ஸ்ரீராமா! உன்னிடம் நான் காட்டும் அன்பும் விசுவாசமும், வெறுமையான வையாகவும் கபடம் நிறைந்தவையாகவும் இருக்கின்றன.

குள்ளநரிக்குத் தொண்டு செய்வதன் மூலம் சிங்கத்திற்கு இருக்கும் புகழைப் பெற ஒரு முயல் விரும்பியது. அந்த முயலின் நிலையைப் போல நான் சாதுக்களை விரோதித்துக்கொண்டு தீயவர்களுடன்தான் தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறேன். (அதாவது—சிங்கத்தைப் போலப் புகழைப் பெற விரும்பிக் குள்ள நரிக்குச் சேவை செய்யும் முயல் இறுதியில் குள்ளநரிக்கே உணவாகிவிடும். அது போலவே மனிதனும் புகழைப் பெற விரும்பித் தீயவர்களோடு சேர்ந்தால் தன்னிடம் இருக்கிற நல்லனவும் போய் முடிவில் நாசமடைவான்.)

'சதா ராமநாமத்தை ஜபித்துக் கொண்டிரு' என்று சிவபெருமான் உபதேசம் செய்திருக்கிறார். ஏனென்றால், இந்தக் கலியுகத்தில் உதட்டளவில் ராமநாமத்தைச் சொன்னாலும் போதும். அந்தப் புனிதநாமம் கவலை என்ற கடலை வற்ற வைத்துவிடும் அகத்தியரைப் போன்றது.

ராமநாமம் அளவற்ற நன்மை தர வல்லது. ஆனந்தத்துக்கும் மங்களத்துக்கும் ஆதாரமாக அது விளங்குகிறது.

இத்தகைய ராமநாமத்தின் மகிமையைக் கேள்வியுற்றுத் துளசிதாசனாகிய நானும் மகிழ்ச்சியடைகிறேன். ஏனெனில் அதுதான் என் வாழ்க்கைக்குத் துணையாகும்.

* * * *

கருணைக்கடலே! உன் வாசலில் துளசிதாசனாகிய இந்த ஏழைக்கு மட்டும் ஏன் இன்னும் நியாயம் கிடைக்கவில்லை? துன்புற்றோர் எங்கு எப்பொழுது கூப்பிட்டார்களோ அங்கே அப்பொழுதே அவர்களின் துன்பங்களைப் பொசுக்கியவனே! கஜேந்திரன், பிரகலாதன், பாண்டவர், சுக்கிரீவன் ஆகியோருக்கு அவர்களின் பகைவர்களால் ஏற்பட்ட சங்கடங்களைத் தீர்த்தவனே! இராவண பயத்தால் மனம் கலங்கிய நிலையில் சரணடைந்த விபீடணனைப் பரதனுக்குச் சமமாக அரவணைத்துக் கொண்டவனே! நான் உனது திருநாமத்தை ஜபித்து ஜபித்து என் இதயத்தில் ஒரு ராமராஜ்யத்தை ஸ்தாபித்துக் கொண்டிருக்கிறேன். அதில் வாழச் செய்வதற்குப் பஜனை, ஞானம், வைராக்கியம் போன்ற நல்லோர்களைக் கொண்டு வந்து கொண்டிருக்கிறேன். அதாவது உன் திருநாமத்தின் மீதுள்ள நம்பிக்கையால் என் இதயத்தில் விவேகம், வைராக்கியம் முதலிய நற்குணங்களுக்கு இடமளித்துக் கொண்டிருக்கிறேன்.

இதை அறிந்து கோபமடைந்த காமம் குரோதம் முதலான துஷ்டத்தனங்கள்



அதன் மீது கெடுபிடி செய்துகொண்டிருக்கின்றன. அவை விவேகம், வைராக்கியம் முதலியவற்றை அழித்து, ஹே பகவான் ஸ்ரீராமசந்திரா! பெண், பகைவன், செல்வம் ஆகியவற்றை அதில் நிரப்பிக்கொண்டிருக்கின்றன. அதாவது எந்த அளவுக்கு என் இதயத்தில் நற்குணங்களை நிரப்ப விரும்புகிறேனோ அந்த அளவுக்குத் தீய குணங்களே இடத்தைப் பிடித்துக்கொள்கின்றன.

சமத்துவம், தொண்டு, கபடம், தான தண்டம் முதலான வழிகளில் பல உபாயங்களைச் செய்து சலித்துவிட்டேன். அதாவது முதலில் காமம் குரோதம் ஆகியவற்றுடன் சமத்துவத்தைப் பற்றிப் பேசிப் பார்த்தேன். அவை சம்மதிக்காத போது அவற்றின் இழிந்த தன்மையை எடுத்துக் காட்டினேன். அதனாலும் பலன் ஏற்படாதபோது வஞ்சனை செய்தேன். எனினும் அதனால் பலன் எதுவும் ஏற்படவில்லை. அதனால் அவற்றின் விருப்பத்திற்கு ஏற்பச் சிற்றின்பம் அளித்தேன். அதன் பிறகும் அவை சாந்தம் அடையாததனால் யோகசாதனங்களால் அவற்றின் பலத்தை முறிக்க எண்ணினேன். ஆனால் அவ்விதம் செய்தும்கூடப் பலன் எதுவும் ஏற்படவில்லை.

ஒரு காரணமும் இல்லாமல் நடந்து கொண்டிருக்கும் இந்தச் சண்டையினால் ஏற்படும் துன்பத்தைப்பற்றி வெளிப்படையாகவே இன்று உன்னிடம் சொல்லி விட்டேன். இதைப்பற்றி உன்னிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்ல முடியும்? தேவர்களிடம் ஏன் முறையிடவில்லை என்று கேட்டால், தேவர்கள் சுயநலக்காரர்கள், திறமையற்றவர்கள், அயோக்கியர்கள், கொடுமையானவர்கள், மனதில் இரக்கம் இல்லாதவர்கள்.

எனவே நான் எங்கே போவேன்? என் குறையைப் போக்க வல்லவர் யார்? உலகில் உன்னைப் போன்று சம்சாரக் கடலிலிருந்து கரையேற்றக் கூடியவர் வேறு யார் இருக்கிறார்கள்?

துளசிதாசனாகிய நான் தாழ்ந்தவன் தான். என்றாலும் உன்னுடையவன்; வேறு யாருக்கும் சொந்தமானவன் அல்ல. ஒரே ஒரு முறை பக்தி என்ற தோள் வலிமையைத் தருவாயாக. அதனால், உன் திருநாமம் என்ற இந்தச் சிறு ராஜ்யத்தில் காமம் குரோதம் முதலானவற்றின் அழிவு ஏற்பட்டு, பஜனை, விவேகம், வைராக்கியம் முதலிய நல்லவை நிறைந்திருக்கட்டும். ★

---

## புதிய புத்தகங்கள்

**1. வாழ்ந்து காட்டிய வள்ளல்**

ரிஷிகேஷ் சுவாமி சிவானந்தரின் வரலாறு. ஆசிரியர்: டி.கே. நாராயணன்—பக்கம் 227—ரூ. 6. சிவானந்த நிலையம், மதுரை-1.

**2. பரகாலன் கண்ட பரிமள அரங்கன்**

திருவிந்தளூர் பெருமானைப் பற்றி திருமங்கை மன்னனின் பத்து பாசுரங்களுக்குப் பெரியவாச்சான் பிள்ளையின் உரையைத் தழுவி எழுதப்பட்ட ஓர் ஆய்வு நூல்.

ஆசிரியர்: புலவர் ஆ. ராமபத்திரன். பக்கம் 64 —ரூ. 4.25, சன்னதித் தெரு, திருவிந்தளூர், மயிலாடுதுறை-609001.

**3. திருமாலின் திரு அவதாரங்கள்**

ஆசிரியர்: மாருதிதாசன். பக்கம் 188—ரூ. 11.

**4. உபநிஷதங்களின் சாரம்**

ஆசிரியர்: நடராஜ சிவாச்சாரியார். பக்கம் 104—ரூ. 6.

**5: பிரார்த்தனைக் களஞ்சியம்**

துதிப்பாடல்கள் பலவற்றின் தொகுப்பு. நடராஜசிவம். பக்கம் 172—ரூ. 9.

மூன்று புத்தகங்களும் நர்மதா பதிப்பகம், 1, வியாசராவ் தெரு, தி. நகர், சென்னை-17.



# கும்பாபிஷேகம் — தத்துவ விளக்கம்

ராஜம் ஐயராமன்

எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருளின் சிறப்பை உணர்ந்து எல்லா மக்களும் போற்றி வழிபடுவது அவசியம். இந்த நோக்கத்தின் அடிப்படையில் நம் சான்றோர் அருவமாய் விளங்கும் இறைவனை ஆலயங்களில் உருவமாய் அமைத்து, மக்கள் வழிபட வகை செய்துள்ளனர்.

மந்திரபூர்வமாகப் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் மூர்த்திகளில் இறைவன் எழுந்தருளி உயிர்களுக்கு அருள் புரியும் இடமே ஆலயம். இவ்வாறு அருள் வழங்கும் ஆலயங்கள் நம் பாரதத்தில் எண்ணற்ற இடங்களில் அமைந்துள்ளன. ஆலயத்தின் மூலம் நம் நாட்டில் இறைவனது திருவருள் பெருகிக் கொண்டே இருக்கிறது.

நமது நாட்டில் காணப்படும் ஆலயங்களில் பெரும்பாலானவை மிகப் பழமை வாய்ந்தவை. இந்த ஆலயங்கள் காலப் போக்கில் பழுதடைந்தோ, சிதிலமடைந்தோ விடுவதைக் காண்கிறோம். எனவே இத்தகைய கோயில்களின் ராஜகோபுரங்கள், விமானங்கள், மண்டபங்கள், கர்ப்பக்கிருகங்கள், பிராகாரங்கள் போன்றவை அவ்வப்போது பழுது பார்த்துத் திருப்பணிகள் செய்யப்பட்டுக் கும்பாபிஷேகங்கள் நடைபெறுகின்றன. இதன் மூலம் ஆலயங்களில் மேலும் மேலும் தெய்விக ஆற்றல் அதிகரித்து அவை அருள் வழங்கும் கேந்திரங்களாகத் திகழ்ந்து வருகின்றன.

**கும்பாபிஷேகம் ஏன்?**

பொதுவாகப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை கும்பாபிஷேகம் நடைபெற வேண்டும் என்று ஆகமங்கள் கூறுகின்றன. கும்பாபிஷேகம் சில காரணங்களின் அடிப்படையில் நான்கு விதமாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை ஆவர்த்தம், அனுவர்த்தம், புனராவர்த்தம், அந்தரிதம் எனப்படும்.

ஓர் இடத்தில் புதிதாக ஆலயம் அமைத்துச் சிவலிங்கத்தையும், பரிவார தெய்வங்களையும் பிரதிஷ்டை செய்து மகா கும்பாபிஷேகம் செய்யப்படுவதை 'ஆவர்த்தம்' என்று கூறுவர்.

நீண்ட காலமாகப் பூஜை சரிவரச் செய்யப்படாததனாலும், மந்திரக்குறைவு சிரத்தைக் குறைவு போன்றவற்றினாலும் சாந்நித்யம் குறைந்துள்ள கோயில்களையும், காடு படர்ந்தும் சிதைந்தும் மண் மூடியும் தீயினால் சேதமாகியும் பெருமழை புயல் பூகம்பம் இவற்றினால் இடிபாடுகள் ஏற்பட்டும் உள்ள பழைய கோயில்களையும் புதிதாக நிர்மாணம் செய்து அதே மூர்த்திகளுக்குக் கும்பாபிஷேகம் செய்வதை 'அனுவர்த்தம்' என்பர்.

நடைமுறையிலுள்ள ஆலயங்களில் காலப்போக்கில் ராஜகோபுரங்கள் முதலியவை பழுது பட்டிருந்தால் அவற்றைப் புதுப்பித்து, அஷ்டபந்தனம் இல்லாமல் இருந்தால் அவற்றை மீண்டும் சாத்தி அந்த அந்த மூர்த்தியை அந்த அந்த மூலத்தில் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்வது 'புனராவர்த்தம்' என்று கூறப்படுகிறது.

கோயிலுக்குள் யாராவது இறந்து போனாலும், கோயில் உட்புறத்தில் விலங்குகள், தூய்மை இல்லாதவர்கள், சமய உண்மை அறியாத புறச் சமயத்தவர் உள்ளே நுழைய நேர்ந்தாலும் செய்யப்படும் பிராயச்சித்தத்தை, 'சம்ப்ரோக்ஷணம்' அல்லது 'அந்தரிதம்' என்பர்.

**கும்பாபிஷேகக் கிரியைகள்**

மூல மூர்த்தியிடமிருந்து இறைவனது ஆற்றலைக் கும்பங்களில் ஆவாகனம் செய்து, யாகசாலையில் பூஜை ஹோமங்களின் மூலம் கும்பத்தில் ஆற்றலைச் சேமித்து, இறுதியில் கும்பாபிஷேகத்தால் மீண்டும் மூல மூர்த்தியினிடம் இறைவனது ஆற்றலைச் சேர்ப்பது 'மகா கும்பாபிஷேகம்' எனப்படும்.

கும்பாபிஷேகக் கிரியைகள் அறுபத்து நான்கு அல்லது ஐம்பத்தாறு என்று சிவாகமங்கள் குறிப்பிடுகின்றன. இவற்றில் பூர்வாங்கக் கிரியையாக முதலில் செய்யப்படும் அனுக்ஞை முதல் கலாகர்ஷணம் வரையில் பன்னிரண்டு கிரியைகள் சிறந்தவையாகக் கருதப்படுகின்றன.

இந்தச் சடங்குகள் யாவும் மந்திரம், கிரியை, பாவனை என்பவற்றில் அடங்கும். ஒவ்வொரு கிரியையையும் தத்துவக் கண் கொண்டு காண வேண்டும்.

**விக்னேச்வரர் பூஜை**

கும்பாபிஷேகக் கிரியைகள் தடையின்றி நடைபெறுவதற்கு விநாயகர் வழிபாடு செய்யப்படுகிறது. இதற்கு விக்னேச்வர பூஜை என்று பெயர்.

**அனுக்ஞை**

கும்பாபிஷேகத்தை நடத்தும் தகுதி உடையவர் விதிப்படி சிவதீட்சை பெற்ற ஆசாரியராகவே இருக்க வேண்டும். அவரே கும்பாபிஷேகத்தை நடத்தத் தகுதியுள்ளவர் என்று அனைவராலும் அங்கீகரிக்கப்பெற்று, பின்பு இறைவன் இறைவியிடம் அனுமதி பெற்று அவரை நியமனம் செய்வது அனுக்ஞையாகும்.

**வாஸ்துசாந்தி**

வாஸ்துபுருஷன் என்ற அசுரன் இறவா வரம் பெற்றவன். எங்கே யாகம் நடந்தாலும் அதைத் தடுப்பதே இவனது வேலை. எனவே யாகசாலையில் இவனது இடையூறு இல்லாமல் இருக்க இந்த அசுரனைக் காவல் காக்கும் ஐம்பத்துமூன்று தேவர்களையும், பிரம்மா முதலிய தேவர்களையும் பூஜை பலி முதலியவற்றால் திருப்தி செய்வது 'வாஸ்து சாந்தி' எனப்படும்.

**மிருத் ஸங்கிரஹணம் (மண் எடுத்தல்)**

அங்குரார்ப்பணம் என்ற கிரியை செய்வதற்காகப் பூமியை வெட்டி மண் எடுப்பார்கள். அப்போது பூமிக்கு அதிபதியான இந்திரனையும் காவல்தெய்வங்களான திக்பாலகர்களையும் பிரம்மாவையும் பிரார்த்தித்துப் பிறகு மண்ணை வெட்டி எடுப்பார்கள். இந்தக் கிரியை மிருத் ஸங்கிரஹணம் எனப்பெறுகிறது.

இவ்வாறு மண் வெட்டும்போது ஏற்படும் தோஷம் நீங்க, ஏழு கடல்களை வரவழைத்துப் பூஜை செய்வதாகப் பாவித்து, வெட்டிய பள்ளத்தில் அபிஷேகம் செய்கிறார்கள்.

அதற்கு அடுத்ததாக அங்குராப்பணம் என்ற கிரியை கும்பாபிஷேகத்தில் இடம் பெறுகிறது.

**காப்புக் கட்டுதல்**

கிரியைகள் நடத்தும் ஆசாரியருக்கு எதிர்பாராத வகையில் இடையூறுகள் ஏற்படாமல் காக்கும்பொருட்டு அவரது கையில் மந்திரபூர்வமாகக் கயிறு கட்டுவது காப்புக் கட்டுதல் எனப்படும். இதனால் கிரியைகள் பூர்த்தியாகும் வரையில் ஆசாரியன் தீட்டு முதலிய தோஷங்கள் அணுகாமல் காக்கப் படுகிறான்.

**கும்ப ஸ்தாபனம்**

கும்பாபிஷேகம் ஆகும் வரையில் இறைவனைக் கும்பத்தில் (குடத்தில்) ஆவாகனம் செய்து அதை வித்யா தேகமாகப் பாவித்து வழிபடுவது கும்ப ஸ்தாபனம். கும்பத்தை எவ்வாறு உடலாகப் பாவிக்க வேண்டும் என்பதை யோகஜம் என்ற சிவாகமம் விளக்கமாகக் கூறுகிறது.

கும்பம் மாமிச சரீரமாகவும், குடத்திலுள்ள தண்ணீர் இரத்தமாகவும், கும்பத்தில் இடப்படும் நவரத்தினங்கள் சுக்லமாகவும் நவ சக்திகளாகவும் கருதப்படுகின்றன. கும்பத்திலுள்ள தர்ப்பைக் கட்டு நாடியைக் குறிக்கும். குடத்தின் மேல் சுற்றப்பட்டுள்ள முப்புரி நூல் நரம்புகளாகும். கும்பத்தைச் சுற்றியுள்ள வஸ்திரம் தோலாகவும், உச்ச

ரிக்கப்படும் மந்திரங்கள் பிராணனுகவும் கருத வேண்டும் என்று சைவாகமம் கூறுகிறது.

குடத்தின் மேல் உள்ள தேங்காய் முகம்; தேங்காயின் மேல் விரித்துள்ள லம்ப கூர்ச்சம் சிகை; மாவிலேகள் சிவ பெருமானின் ஜடாபாரங்கள் என்று அங்க கற்பனே பற்றிச் சிவாகமம் கூறுகிறது.

கும்பம் என்பது, ஆறு அத்துவாக்களின் வடிவமாகும்.

கும்பத்தின் அடியில் ஆத்ம தத்துவங்களும், நடுவில் வித்யா தத்துவங்களும், முடியில் சிவதத்துவங்களும் உள்ளதாகப் பாவித்துப் பூஜிக்க வேண்டும். கும்பத்தில் காவிரி போன்ற சர்வ தீர்த்தங்களும், பஞ்சாவரண தேவதைகளும் பிரதிஷ்டை செய்யப்பட்டுப் பூஜை செய்யப்படுகிறது.

**கலாகர்ஷணம்**

சிவலிங்கத்திலுள்ள பிரசாத கலேகளேயும், ஆறு அத்துவாக்களேயும் (மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலே), ஆன்ம தத்துவம், வித்யா தத்துவம், சிவ தத்துவம் ஆகியவற்றையும் நியாசங்கள் மூலமாகவும், மூல மந்திர ஆவாகனங்கள் மூலமாகவும் கும்பத்தில் ஆகர்ஷணம் செய்து, குறிப்பிட்ட காலம் வரையில் கும்பத்திலேயே இருக்கச் செய்வதற்குக் 'கலாகர்ஷணம்' என்று பெயர். எந்த மூர்த்தியை எந்த ரூபத்தில் ஆவாகனம் செய்கிருேமோ அந்த மூர்த்தியை அந்தக் குடத்தில் வழிபடுவதாக ஆகும்.

**யாகபூஜை**

இறைவனே முறைப்படி ஆவாகனம் செய்து, கும்பத்தை யாகசாலேயில் வைத்து, ஒன்பது, ஐந்து, ஒன்று என்ற யாககுண்ட முறைப்படி ஒவ்வொரு காலமும் பூஜை செய்வது யாகபூஜையாகும்.

கும்பாபிஷேகத்திற்கு யாகசாலே மிகவும் முக்கியம். யாகசாலே மந்திரங்களாலும் தேவர்களாலும் புனிதமாக்கப்பட்ட இடமாகும். இங்கே சகள நிஷ்கள மூர்த்திகளாகச் சூரியனும் சிவபெருமானும் விளங்குகின்றனர். துவார பாலகர்கள், மகாகாளன், நந்தி முதலிய திக் அதிபர்களும், லட்சுமி, விநாயகர், சப்த குரு முதலியவர்களும் நிறைந்துள்ள இடம் யாகசாலே. இத்தகைய யாகசாலேயின் நடுவில் வேதிகை குண்டம் அமைக்கப்படுகிறது.

யாகசாலே ஒன்று, மூன்று, ஐந்து, ஒன்பது என்ற எண்ணிக்கையில் யாககுண்ட விதானமாக அமைக்கப்படும். அதைச் சுற்றிப் பதினுறு, இருபத்துநான்கு, முப்பத்திரண்டு பதங்களாகப் பல பதங்களே அமைப்பர். அதில் தீயை வளர்த்து, இறைவனுக்குச் செலுத்தப்படும் சிறந்த பூஜைக்கு உரிய பொருள்களேத் தீயில் இடுவார்கள். இதுவே 'ஹவிஸ்' என்று வழங்கப்படுகிறது. பாகனிடம் யானே கட்டுப்படுவது போல இங்கு இறைவன் ஆசாரியரிடத்தில் அன்பால் கட்டுப்படுகிருர்.

யாகசாலேயில் அஷ்ட மூர்த்தி வழிபாடு நடைபெறுகிறது. வேதிகையாகிய மேடைகள் பிருத்வியாகிய நிலத் தத்துவத்தைக் குறிக்கும். கும்பங்களிலுள்ள புனித நீர் ஜலத் தத்துவத்தை உணர்த்துகிறது. ஹோம குண்டத்திலுள்ள நெருப்பு அக்கினி தத்துவத்தை விளக்குகிறது. இந்த அக்கினி சிவபெருமானுகவே கருதப்படுகிறது. மந்திர ஒலிகளும் வேத பாராயணங்களும் வாயு தத்துவமாகப் போற்றப்பெறுகின்றன. இடைவெளியான ஆகாயம் பரம ஆகாச வடிவமான ஆகாய தத்துவமாக வணங்கப்படுகிறது.

யாகசாலேயில் காலேயில் நடைபெறும் சூரிய வழிபாடும், மாலேயில் நடைபெறும் சந்திர வழிபாடும் சூரிய சந்திர வழிபாடாகின்றன.

கும்பாபிஷேக சமயத்தில் ஆசாரியர்களேயும் அடியார்களேயும் சிவமாகக் கண்டு வழிபடுவது ஆன்ம வழிபாடாகும். இவ்விதம் அஷ்ட மூர்த்தி வழிபாடு செய்யப்படுகிறது.



### ஸ்பர்சாருதி

யாகசாலையில் செய்யப்பட்ட ஹோமங்களையும், அவற்றில் ஏற்பட்ட ஆற்றலையும் மூல பிம்பங்களிடத்தில் தங்கக் கம்பிகள் மூலமாகவும், தர்ப்பைக் கயிறு, வெள்ளிக் கம்பி முதலியவை மூலமாகவும் சேர்ப்பிப்பது; மின் ஆற்றலைச் செப்புக் கம்பிகள் மூலம் செலுத்துவதைப் போல, இறைவனது ஆற்றலை அந்த அந்த மூல மூர்த்திகளிடத்தில் சேர்ப்பிப்பது ஸ்பர்சாருதி எனப்படும்.



### அஷ்டபந்தனம்

மூர்த்தியையும் பீடத்தையும் ஒன்று சேர்ப்பது அஷ்டபந்தனமாகும். இதற்குத் தேவையான மருந்துப் பொருள்கள் சுக்கான் (சுண்ணாம்புக் கல்), கற்பொடி, குங்கிலியம், கொம்பரக்கு, காவிக் கல், செம்பஞ்சு, உலர்ந்த லிங்கம், வெண் மெழுகு, வெண்ணெய் என்ற எட்டுப் பொருளாகும். இவற்றை இடித்துப் பந்திப்பது அஷ்டபந்தனம் எனப்படும்.

### குடமுழுக்கு

யாகசாலையில் எந்த மூர்த்திக்கு எந்தக் குடம் வைத்துப் பூஜிக்கப்படுகிறதோ அந்தக் குடத்து நீரை அந்த மூர்த்திக்கு அபிஷேகம் செய்வது குடமுழுக்கு எனப்படும். அப்போது அந்த மூர்த்தி அந்த விக்கிரகத்தில் எழுந்தருளுகிறார். அந்த விக்கிரகத்திலிருந்து பல விதத் தெய்விக சக்திகள் வெளிப்படுகின்றன. அவை அந்த மூர்த்தியை வழிபடும் மக்களுக்குப் பல வகையில் அருள் புரிகின்றன.

### சிவலிங்கப் பிரதிஷ்டை

கும்பாபிஷேகக் கிரியைகளில் சிவலிங்கப் பிரதிஷ்டை மிகவும் முக்கியமானதாகும். இந்தப் பிரதிஷ்டைச் சடங்கில் பிரதிஷ்டை, ஸ்தாபனம், ஸ்திதி ஸ்தாபனம், ஆஸ்தாபனம், உத்தாபனம் என்று ஐந்து வகை உண்டு.

இதில் பீட வடிவமாகிய சக்தியையும், லிங்க வடிவாகிய சிவத்தையும் சிவாகம முறைப்படி சேர்ப்பது 'பிரதிஷ்டை' எனப்படும். இவ்விதம் பீடத்தையும் பிம்பத்தையும் அசையாமல் பல ஆண்டுக் காலம் காப்பதற்கு அஷ்டபந்தன மருந்து சாத்தப்படுகிறது.

'ஸ்தாபனம்' என்பது பாண லிங்கம், தாது லிங்கம், உலோக லிங்கம் முதலியவற்றை அதன் அதன் இடத்தில் முன் கூறியபடி ஸ்தாபனம் செய்வதாகும்.

பீடமும் லிங்கமும் ஸ்படிகம் போன்ற ஒரே பொருளால் ஸ்தாபனம் செய்வது 'ஸ்திதிஸ்தாபனம்' எனப்படும்.

லிங்கத்தின் மூன்று பாகங்களையும் தனித் தனியாகச் செய்து பின்பு மகா லிங்கத்தைப் பிரசாத மத்தியில் மந்திர பூர்வமாக ஸ்தாபனம் செய்வது 'ஆஸ்தாபனம்' எனப்படும்.

'உத்தாபனம்' என்பது, ஏற்கனவே உள்ள சிவலிங்கம் சேதமுடையதாக இருந்தால் அந்த இடத்தில் வேறு லிங்கத்தை முன்கூறிய வகையில் ஸ்தாபிப்பதாகும்.

இவ்வாறு அஷ்ட பந்தனம் இட்டுப் பிரதிஷ்டை செய்யும்போது, பிம்பத்திற்கு அடியில் யந்திரங்கள் பிரதிஷ்டை செய்யப்படுவதுண்டு. அந்த அந்தத் தெய்வங்களுக்கு உரிய சக்கரத்தைச் செப்புத் தகட்டிலோ பொன் தகட்டிலோ வரைந்து, அதை ஒரு மண்டலம் வரை பூஜை செய்து அந்தத் தகட்டிற்கு

---

ஒரு நாடு வலிமையுறுவது, சிறிய எண்ணங்களைக் கொண்ட பெரிய மனிதர்களால் அன்று; பெரிய எண்ணங்களைக் கொண்ட சிறிய மனிதர்களாலேயே.

—சுவாமி ராமதீர்த்தர்

ஆற்றலை உண்டுபண்ணி, அதைப் பிரதிஷ்டை செய்வது வழக்கம்.

இந்த யந்திரங்களே திருக்கோயில்களுக்கு உயிர்நிலையாக விளங்குகின்றன. யந்திரம் இறைவனது அருட்கருவியாகத் திகழ்ந்து, திருவருட்சக்தியை இரவும் பகலும் இடைவிடாமல் நாற்புறமும் பரப்பிக்கொண்டிருக்கும். எனவே கும்பாபிஷேகக் கிரியைகளில் யந்திரப் பிரதிஷ்டை மிகவும் சிறப்பான அம்சமாகும்.



யாகசாலையில் பூஜையின்போது ஆசாரியர்கள் தங்களுடைய பிராணாயாமத்தால், நியாசங்களால், முத்திரைகளால், கூர்ச்சம் (தர்ப்பை) மாவிலை அமைத்த கும்பங்கள் மூலம் அவற்றிலுள்ள நீரில் ஆற்றலை அதிகரிக்கச் செய்கின்றனர். யாக முடிவில் அந்தப் புனித நீரைப் பிம்பத்திற்கும் கும்பத்திற்கும் அபிஷேகம் செய்து, மூர்த்திகளும் திருக்கோயில்களும் என்றும் சாந்நித்யம் பெற்று விளங்கும்படி செய்யப்படுகிறது. இதுவே மகா கும்பாபிஷேகம் ஆகும்.

அன்றாடம் கோயில்களிலுள்ள இறைவனிடமிருந்து வெளிப்பட்டுச் செல்லும் திருவருட் சக்திக்கு ஈடு கொடுப்பதற்காகவே தினமும் கோயில்களில் நித்திய நைமித்திக பூஜைகள் நடைபெறுகின்றன. ஆராதனை, பூஜைகள் சரிவர நடைபெறுமற் போனால் நாளடைவில் திருவருட்சக்தி குறைந்துவிடுகிறது. அதனால்தான் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மகாகும்பாபிஷேகம் செய்து, அங்கு ஆற்றலைப் புதுப்பித்து அதிகரிக்கச் செய்கின்றனர்.

இத்தகைய கும்பாபிஷேகங்களைத் தரிசனம் செய்பவர்கள் தீவினைகள் அகன்று எல்லா நலன்களையும் பெறுவார்கள். அன்று வரை செய்த பாவங்கள் தீரும், சிவ அபசாரங்கள் தீரும், கும்பாபிஷேகமே பெரும் சாந்தி என்று திருஞானசம்பந்தர் கூறியுள்ளார்.

**மண்டலாபிஷேகம்**

மகா கும்பாபிஷேகம் ஆன பின்பு நாற்பத்தெட்டு நாட்கள் அபிஷேகம் செய்வார்கள். அப்போது பிம்பமும் பீடமும் நன்கு அழுந்திப் பலம் பெறும் பொருட்டு எள் எண்ணெயால் தினமும் அபிஷேகம் செய்வார்கள். கும்பாபிஷேகத்தால் ஏற்பட்டுள்ள சக்தியை மக்கள் இடைவிடாது பெற வேண்டும் என்பதற்காகவும், மக்கள் பக்தியும் அருளும் பெற வேண்டும் என்பதற்காகவும் தொடர்ந்து ஒரு மண்டலம் தினமும் அபிஷேகம், சகஸ்ரநாம அர்ச்சனை, ருத்திரம் மகாருத்திரங்கள் நடைபெறும். இறுதி நாள் பதினொரு கலசங்கள் வைத்து மகா அபிஷேகம் செய்து பூர்த்தி செய்வார்கள். அதுவரை கும்பாபிஷேக நிகழ்ச்சிகள் இருப்பதாகவே கருதி வழிபட வேண்டும். ★

புனிதமான விஷயங்களை உணர்ச்சி இன்றி கையாளும் வேடதாரிகளே பெரிய நாத்திகர்கள்.
—பேக்கன்

இறைவனது அருள் ஒன்றையே நம்பி இருக்கவும், எந்த நிலையிலும் அதன் உதவியை வேண்டி அழைக்கவும் நாம் கற்றுக்கொண்டால் அது அற்புதங்களை நடத்திக்கொண்டே இருக்கும்.
—அன்னை (அரவிந்த ஆச்ரமம்)




# பாரதியின் ஆன்மிகச் சிந்தனைகள்

சுவாமி கமலாத்மானந்தர்

## மௌனம், மந்திரம், தியானம்

அரவிந்தரின் தொடர்பு, முக்கியமாகச் சித்தர்களின் தொடர்பு, பாரதியைத் தமது உள்ளத்தில் ஆழ்ந்து மூழ்கி ஆன்மிக உலகில் சஞ்சரிக்க வேண்டும் என்ற உத்வேகத்தைத் தந்துள்ளது.

மௌனம் என்ற சொல்லிலிருந்து முனிவன் என்ற சொல் வந்தது. மௌனமாக இருந்த யோகிகளை முனிவன் என்று சொல்வது மரபு. 'யோகத்தின் முதல் வாசல் வாக்கைக் கட்டுப்படுத்துவது—யோகஸ்ய ப்ரதமம் த்வாரம் வாங்நிரோதோ அபரிக்ரஹ:' என்று ஆதிசங்கரர் விவேகசூடாமணியில் குறிப்பிட்டார்.

'யோக: சித்தவ்ருத்திநிரோத:-மனதில் எழும் சிந்தனைகளை ஒடுக்குவது யோகம்' என்று பதஞ்ஜலி யோகசூத்திரம் கூறுகிறது. அதிகமாகப் பேசுவது சித்தத்தில் சங்கல்ப விகல்பங்களைத் தோற்றுவிக்கிறது. சங்கல்ப விகல்பங்கள் இல்லாமல் மனநாசம் ஏற்படுவதைச் சித்தர்கள் பெரிதும் பாராட்டிப் பேசியிருக்கிறார்கள்.

சங்கல்ப விகல்பங்கள் வாக்கைக் கட்டுப்படுத்துவதனால் அதாவது மௌனம் அனுஷ்டிப்பதனால் பெருமளவில் குறைகின்றன. அது காரணமாகச் சித்தம் அமைதியாக இருக்கும். 'அந்த ஒருவனாகிய பரமாத்மாவையே அறிவீர்களாக. மற்ற வார்த்தைகளை விட்டொழித்துவிடு. இதுவே மோட்சத்திற்குப் பாலமாக அமைந்திருக்கிறது—அந்யா வாசோ விமுஞ்சத, அம்ருதஸ்யைஷ ஸேது:' என்று முண்டக உபநிஷதம் கூறுகிறது.

பாரதியார் தமது யோக சாதனையின் ஓர் அங்கமாகப் பல நாள் மௌனவிரதம் இருந்திருக்கிறார். ஓம் என்ற ஓங்காரத்தைப் போன்று மந்திரச்சொல்லைக் கண்டு பிடிக்கப் பாரதியார் சாதனைகள் புரிந்து முயற்சி செய்திருக்கிறார்.



பாரதிக்கு மந்திரங்களில் பெருமளவிற்கு நம்பிக்கை இருந்தது. 'அஹம் பிரமமாஸ்மி' என்பது போன்று, 'நான் சுகம், நான் இந்த உலகத்தின் நாதன், நான் உலகிற்கு அடிமை அல்ல, நானே பலம், நான் நோயற்றவன், நான் வலிமையுடையவன், நானே ஆரோக்கியம், நான் தேவன், நான் அமரன், எனக்குச் சாவு கிடையாது, நான் கடவுள், ஆதலால் சாகமாட்டேன்' என்றெல்லாம் பாரதியார் தமக்குத் தாமே சிந்தித்திருக்கிறார்.

தியானத்தின் மகத்தான சக்தியை நன்கு உணர்ந்தவர் பாரதியார். ஆகவே அவர் தியானத்தைப்பற்றிப் பல கருத்துக்களைத்

தெரிவித்திருக்கிறார். அவற்றில் மாதிரிக்காகச் சில கருத்துக்களை மட்டும் கீழே தருகிறேன்—''தியானத்தின் சக்தியை எளிதாக நினைக்க வேண்டாம். பாரததேசத்தில் ஒவ்வொருவனுக்கும் தற்காலத்தில் நல்ல தியானம் இன்றியமையாதது. சோற்றை விட்டாலும், ஒரு தனியிடத்தே போயிருந்து உயர்ந்த சிந்தனைகள், அமைதி கொடுக்கக் கூடிய சிந்தனைகள், பலம் தரக்கூடிய சிந்தனைகள், துணிவும் உறுதியும் தரக்கூடிய சிந்தனைகள்—இவற்றால் அறிவை நிரப்பிக் கொண்டு தியானம் செய்வதை ஒரு நாளேனும் தவறவிடாதே.''

பாரதி மந்திரம் காண விரும்பி மௌனம் இருந்தார், தியானத்தை வலியுறுத்தினார் என்று சொல்லும்போது, அவரது புதிய ஆத்திசூடியில் வரும்—



ஐம்பொறி ஆட்சிகொள்.
தெய்வம் நீ என்றுணர்.
தவத்தினை நிதம் புரி.
மந்திரம் வலிமை.
மோனம் போற்று.

என்ற வரிகளையும் நாம் நினைவில் கொள்ளலாம்.

சித்தர்களோடு பழகிய பாரதி, தாமும் ஒரு சித்தராக வேண்டும் என்ற தணியாத ஆவல் கொண்டார்; ஆவல் கொண்டதோடன்றி அதற்காக முயற்சியும் செய்திருக்கிறார்.

**பக்தி**

பக்தியினாலே—இந்தப்
பாரினி லெய்திடும் மேன்மைகள் கேளடீ
சித்தம் தெளியும்—இங்குச்
செய்கை யனைத்திலும் செம்மை
பிறந்திடும்

என்ற பாடலில், பக்தியினால் விளையும் மேன்மைகள் இவை என்று ஒரு பட்டியலே தந்திருக்கிறார் நம் கவிஞர்.

பக்தி கொண்டவர்கள் எவ்விதம் இருப்பார்கள் என்பதைக் குறித்தும் பாரதியார் பல இடங்களில் சொல்கிறார். அவற்றில் சில வருமாறு—

பக்தி யுடையார் காரியத்தில்
பதறார் மிகுந்த பொறுமையுடன்
வித்து முளைக்கும் தன்மை போல்
மெல்லச் செய்து பயனடைவார்.
தெய்வம் மறவார், செயுங்கடன்
பிழையார்
ஏதுதான் செயினும், ஏதுதான் வரினும்
இறுதியில் பெருமையும் இன்பமும்
பெறுவார்.

உரைநடையில் பாரதி சொல்வதாவது—''எந்தத் தொழில் செய்து பிழைத்தாலும் தெய்வபக்தி இருந்தால் இகத்தில் மேன்மையும் பரத்திலே மோட்சமும் உண்டு.''

''தெய்வமே துணை என்று இருப்போர் ஓயாமல் தொழில் செய்துகொண்டிருப்பார்கள். தெய்வபக்தி உண்மையானால், பரோபகாரம் அங்கே இருக்கும். பரோபகாரம் இல்லாத இடத்தில், தெய்வபக்தி வேஷத்தைத் தவிர வேறொன்றுமில்லை.''

''தெய்வபக்திக்கு நல்ல பயனுண்டு. ஆனால் அதனுடன் விவேகம் சேர்ந்திருக்க வேண்டும். விவேகமில்லாதவனுடைய தெய்வ பக்திக்கு உறுதி கிடையாது. தெய்வத்திடம் ஒருவன் ஒரு வரம் கேட்கப் போகையிலே, முதலாவது விவேகம் கேட்க வேண்டும். விவேகமில்லாதவன் குருடன். விவேகத்துடன் சேர்ந்த தெய்வபக்தியே உண்மையானது. அவ்விதமான தெய்வ பக்தியினால் ஒருவன் எடுத்த காரியத்தில் ஜயமடையலாம்.''

''பக்தி என்பதாவது தெய்வத்தை நம்புதல்; குழந்தை தாயை நம்புவது போலவும், பத்தினி கணவனை நம்புவது போலவும், பார்த்த பொருளைக் கண் நம்புவது போலவும், தான் தன்னை நம்புவது போலவும் தெய்வத்தை நம்ப வேண்டும்.'' பாரதி—நூல்கள்: மூன்றும் தொகுதி ★

